بسم الله الرحمن الرحيم
نحمده ونصلي على رسوله الكريم



# தாருல் இஸ்லாம்

## DAR-UL-ISLAM

பத்திரிகாசிரியர்:—பா. தாவுத்ஷா

மலர் - 7. | 1925ஆ ஏப்ரில்மீ 1உ | இதழ் - 4.

## :குர் ஆன் ஆயத்

"ஏ நன்னம்பிக்கை கொண்டவர்காள்! நீங்கள் உங்களைத் தீமையினின்றும் காத்துக்கொள்ளும் பொருட்டு.........நோன்பானது உங்களுக்கு விதிக்கப்பட்டிருக்கிறது." (2: 183)

இஸ்லாமார்க்கத்தில் நோன்பானது தொழுகையைப்போல் சகல மனிதகோடிகளுக்கும் அத்தியாவசியமாக அமைக்கப்பட்டிருக்கிறது. இம் மார்க்கத்தில் தொழுகை, ஏழை விகிதம், ஹஜ் ஆகிய மூன்றனுடன் நோன்பும் நான்காவது முக்கிய கடமையாக நியமிக்கப்பட் டிருக்கிறது. மேற்கூறிய 2: 183-வது ஆயத்தில் நபிகள் நாயகமவர்களின் காலத்துக்கு முன்னிருந்த எல்லா ஜாதியார்களுக்கும் நோன்பானது விதியாக்கப்பட்டிருந்ததென்னும் விஷயம் காணப்படுகிறது. "நோன்பானது எல்லாக் காலங்களிலும் எல்லா ஜாதியார்களிடத்தும் துக்கக்கொண்டாட்டக் காலங்களிலும் துன்பமும் துயாமும் நேரிட்ட வேளைகளிலும் அதிகமாக அனுஷ்டிக்கப்பட்டு வந்திருக்கிறது" (Cr. Bib. con.). ஹிந்துக்களுள்ளும் நோன்பானது அனுஷ்டானத்திலிருந்து வருகிறது. இயேசு கிரிஸ்துவின் இரத்த சாக்ஷி மாணத்தால் தங்களுடைய பாபமனைத்தும் பரிகரிக்கப்பட்டுப் போய்விட்டபடியால் தாங்களொன்றும் மதச்சடங்குகளை அனுஷ்டிக்க வேண்டியதில்லையென்று எண்ணிக்கொண்டிருக்கும் கிரிஸ்தவர்களுக்கும் அவர்களுடைய குருவினால் நோன்பானது விதிக்கப்பட்டிருக்கிறது: "நீங்கள் உபவாசிக்கும்போது மாயக்காரரைப்போல முகவாடலாய் இராதேயுங்கள்; அவர்கள் உபவாசிக்கிறதை மனுஷர் காணும்பொருட்டார்க, தங்கள் முகங்களை வாடப்பண்ணுகிறார்கள்...நீயோ உபவாசிக்கும்போது, அந்த உபவா

சம் மனுஷர்களுக்குக் காணப்படாமல், அந்தரங்கத்திலிருக்கிற உன் பிதாவுக்கே காணப்படும்படியாக, உன் தலைக்கு எண்ணெய் பூசி, உன் முகத்தைக் கழுவு" (மத்தேயு, 6: 16, 17). மேலும் பரிசேயர்கள், இயேசுவின் சிஷ்யர்கள்யோவானின் சிஷ்யர்களைப்போல் நோன்பு நோற்கவில்லையென்று ஆக்ஷேபித்தபோது இயேசுநாதர் தம்மை எடுத்துக்கொண்டு போய் விட்டபிறகு "அந்த நாட்களிலே உபவாசிப்பார்கள் என்றார்" (லூக்கா, 5: 33-35).

ஆனால் இஸ்லா மார்க்கமானது இந் நோன்பு நோற்றலுக்கு ஒரு நூதனமான கருத்தைக் கொடுத்திருக்கிறது. இஸ்லாத்துக்கு முன் நோன்பானது துக்க காலங்களிலும் துயர வேளைகளிலும் உடலை வருத்தக்கூடிய ஓர் உபவாசமா யிருந்துவந்தது; மேலும் பாபத்துக்கொருபிராயச்சித்தமாகவும் கருதப்பட்டுவந்தது. இஸ்லாத்திலோ நோன்பென்பது மனிதனுடைய ஒழுக்கத்தையும் ஆத்மார்த்தத்தையும் விருத்தி செய்யும் பொருட்டு ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. இதுதான், "நீங்கள் உங்களைத் தீமையினின்றும் காத்துக்கொள்ளும்பொருட்டு" என்னும் வாக்கியத்தினால் உண்டாகும் கருத்தாகும். ஆதலின் தீமையை விலக்கிக்கொள்வதற்கே நோன்பானது ஒரு சாதனமாயிருக்கிறது. எனவே இஸ்லாமிய சித்தாந்தப் பிரகாரம் அன்ன பானாதிகளையும் மனைவியருடன் சயனிப்பதையும்மட்டும் விலக்கிவைத்தலென்பது இந் நோன்பின் முழுக் கருத்தாகமாட்டாது. இப்படிப்பட்ட எல்லா விதமான தீமைகளினின்றும் விலகி யிருப்பதே சரியான நோன்பெனப்படும். ஆனால் அன்ன பானாதிகளை விலக்குவதென்பது ஒரு வெளிப்படையான அடையாளமா யிருக்கிறது. ஆண்டவனுடைய ஆணைக்குக் கட்டுப்பட்டு நமக்கு உரிமையுள்ள காரியங்களையே செய்யக்கூடாதென்று நம்முடைய நோன்பின்போது விட்டுவிடுவதனால் நமக்கு உரிமையல்லாத காரியங்களில் பிரவர்த்திப்பதி னின்றும் எவ்வளவு தூரம் நாம் ஒதுங்கி யிருக்கவேண்டுமென்னும் தத்துவத்தை உணர்ந்து கொள்ளுகிறோம். இஸ்லாத்தின் ஒவ்வொரு காரியமும் ஆத்ம முன்னேற்றத்துக்காக அமைக்கப்பட் டிருப்பதேபோல் இந்த ரமலான் மாதத்து நோன்பும் அப்படிப்பட்ட கருத்துடனேதான் அமைக்கப்பட்டிருக்கிறது. இன்னமும் சாதாரண காலங்களில் ஆண்டவனுக்காக நம்முடைய சுகபோக சௌகரியங்களை யெல்லாம் நீக்கிவைப்பதனால் இஸ்லாத்தின் நன்மைக்காகவும் முஸ்லிம்களின் பாதுகாப்புக்காகவும் அவசியம் நேருங்கால் எப்படிப்பட்ட கஷ்ட நிஷ்டூரங்களையும் சகித்துக் கொள்வதற்கான பழக்கமும் உண்டாகின்றது.

:குர் ஆன் ஷரீ'பானது அரபிகளின் பன்னிரு மாதங்களுள் 9-வது மாதமாகிய ரமலானில் ஆண்டவனால் வெளியாக்கப்பட ஆரம்பமாயிற்று. இவ்விஷயம் குர். 2:185-ல் விளக்கப்பட்டிருக்கிறது. எனவே சாந்திரமானக் கணக்கின்படி ரமலானில் உண்டாகும் 29 அல்லது 30 தினங்கள் மட்டும் ஒவ்வொரு நாளும் நோன்பிருத்தல் வேண்டும். இம்மாதத்தில் நோன்பு நோற்கமுடியாமல் நோய் வாய்ப்பட்டோரும், பிரயாணத்தின் மீதிருப்போரும் ரமலானில் எத்தனை நாட்கள் உண்டோ அத்தனை நாட்கள்மட்டும் வேறு சமயத்தில் நோன்பிருத்தல்வேண்டும். அடிக்கடி உண்டாகக்கூடிய சீக்கினாலேனும் நெடு நாளாய்த் தொந்தரை செய்துகொண்டிருக்கும் நீண்ட வியாதியினாலேனும் அல்லது மிகத் தள்ளாமையான வயோதிகத்தினாலேனும் சகிக்க முடியாத (முதிர்ந்த கர்ப்பிணிகளும் குழந்தைகளுக்குப் பால் கொடுக்கும் ஈற்றிளம் பெண்டிர்களும் போன்ற) பலஹீனத்தினாலேனும் அவஸ்தை யுற்றிருப்போர்



ரமலான் மாத முழுதும் ஒரு மனிதனுக்குரிய ஆகாரத்தை ஒவ்வொருநாளும் தருமம் செய்யவேண்டுமென்று "பு'காரி"யிலும் "அபூ'தாவூதி"லும் காண்கின்றோம். மேலும் ரமலான் மாதத்தில் நோன்பு நோற்பதுடன் பிறருக்குச் சுயமே செய்யப்படக்கூடிய சத்காரியங்களையும் செய்து வருதல்வேண்டும். நபிகள் நாயகமவர்கள் (ஸ'ல் அ'ம்) தங்களுடைய தான தருமத்தில் எல்லை கடந்த வள்ளலாயிருந்து வந்தார்களென்பது இவ்வுலகமறிந்த விஷயமேயாயினும் அவர்கள் இந்த ரமலான் மாத முழுதும் மிக மிக அதிகமாக அளவுகடந்த தான தருமங்களைச் செய்து வந்தார்களென்று பு'காரியாசிரியர் கூறுகின்றார். ஆனால் இதன் மிகக் குறைவான தருமமானது ரமலான் மாதத்தின் முடிவில் மறுநாட் காலையில் ஒவ்வொரு முஸ்லிம் ஆண், பெண், குழந்தை, எஜமான், வேலைக்காரன் ஆகிய எல்லோராலும் ஸத':க'துல் 'பித்ர் என்னும் பெயருடன் ஓர் ஏழை மனிதனுடைய ஆகாரத்தின் அளவினதாகக் கொடுக்கும் தருமமாகும். (பு'கா'ரி)

[நோன்பின் அனுஷ்டான முறைகளை எமது "இஸ்லாம்" என்னும் நூலில் விவரமாகக் காண்பீர்கள். ப-ர்.]

# நாயக வாக்கியம்

## (பு'கா'ரியிலிருந்து)

16. எவரிடம்(பின் கூறப்படும்) மூன்று விஷயங்கள் காணப்படுமோ அவர் ஈமானுடைய இன்பத்தைப் பெற்றுக்கொண்டார்: அல்லா(ஹ்)வும் அவனுடைய ரஸூலும் அவனுடைய எண்ணத்தில் மற்றவைகளைக்காட்டினும் அதிகப்பிரியமுள்ளவர்களாயிருத்தல். இன்னும் மனிதனை நேசித்தல்; ஆனால் அல்லா(ஹ்)வுக்காக வேண்டியே (நேசித்தல்). இன்னும் கு'ப்ரில் திரும்புவதை அருவருத்தல்—நெருப்பில் (தான்) போடப்படுவதை அருவருத்தல் (அனஸ்-ரலி')

17. அன்ஸாரிகளை (மதீனாவில் முஸ்லிம்களுக்கு உதவிபுரிந்தவர்களை) நேசித்தல் (பரிபூர்ண) ஈமானின் அடையாளமாயிருக்கும். இன்னும் அன்ஸாரிகளைப் பகைத்தல் கள்ளத்தனத்தின் அடையாளமாயிருக்கும் (அனஸ்-ரலி')

18. ரஸூல் (ஸ'ல் அ'ம்) அவர்கள் தங்களுடைய ஸ''ஹாபா'க்களுள் (தோழர்களுள்) ஒரு கூட்டம் தங்களைச் சூழ்ந்திருக்கும்போது சொன்னார்கள்: "நீங்கள் அல்லா(ஹ்)வுக்கு ஒன்றையும் இணைவைப்பதில்லை என்றும், திருடுவதில்லை யென்றும், வியபிசாரம் செய்வதில்லையென்றும், உங்களுடைய பிள்ளைகளைக் கொலைபுரிவதில்லையென்றும், உங்களுடைய கைகளுக்கிடையிலும் கால்களுக்கிடையிலும் (அஃதாவது சுயமே) நீங்களே சிருஷ்டித்த அவதூறுகளைச் செய்வதில்லையென்றும், நற்காரியத்தில் நீங்கள் (அல்லா வுக்கும் ரஸூலுக்கும்) மாறுபாடு செய்வதில்லை என்றும் வாக்குறுதி செய்யுங்கள். பின்னர் உங்களுள் யார் இதை நிறைவேற்றுகிறாரோ அவருக்கு அவருடைய சன்மானம் அல்லா(ஹ்)வினிடத்திலுண்டு; மேலும் இவைகளிலொன்றை அடைந்தவன் இதனால் இவ்வுலகில் தண்டிக்கப்படுவான்; ஆதலின் இதுவே அவனுக்குப் பிராயச்சித்தமாயிருக்கும்; மேலும் இவைகளி

லொன்றை ஒருவன் அடைந்து அதை அல்லா(ஹ்)மறைத்து விடுவானாயின் அப்போது அவன் அல்லா(ஹ்)வின் பக்கம் சாட்டப்பட்டவனாயிருக்கும்; நாடுவானாயின் (அல்லாஹ்) அவனை மன்னித்துவிடுவான்; மேலும் நாடுவானாயின் அவனை வேதனைசெய்வான்." (உபாததிப்'னுசாமித் ரலி'சொல்கிறார்கள்:)நாங்களெல்லோரும் அவர்களிடம் இதன்மீது உறுதிப்பாடு செய்தோம் (உபாததிப்'னுசாமித் ரலி').

19. சமீபத்தில் முஸ்லிமின் உயர்ந்த ஐசுவரியம் ஆடுகளாய்விடும்; அவைகளைக்கொண்டு மலையுச்சிக்கும் மழை வருஷிக்கும் இடங்களுக்கும்போவார்; தம்மார்க்கத்தைக் கலகங்களைவிட்டும் (காப்பாற்றினவராக) ஓடுவார் (அபூ'ஸயீத்குத்ரீ-ரலி').

20. ரஸூல்(ஸ'ல் அ'ம்) ஜனங்களுக்கு ஏதேனுமொன்றை உத்தரவிடுவார்களாயின் ஜனங்களால் (நிரந்தரமாகச்) செய்யச் சக்தியுள்ளதைத்தான் அமல்களினின்றும் உத்தரவு செய்வார்கள். (ஸ'ஹாப்'ாக்கள்) கேட்டார்கள்: யாரஸூலுல்லா! நாங்கள் உங்களைப்போலில்லை. நிச்சயமாகவே அல்லாவாகிறவன் தங்களின் முந்தின பிந்தின பாவங்களை எல்லாம் உங்களுக்கு மன்னித்துவிட்டான்; (ஆனதால் நாங்கள் தங்களைக் காட்டினும் அதிகம் வணக்கம் புரியவேண்டுமே). அப்போது கோபித்தார்கள்; எதுவரை எனின், கோபமானது அவர்களுடைய முகத்தில் காணப்படும்வரை. பிறகு சொன்னார்கள்: "நிச்சயமாக உங்களுள் அதிகப் பரிசுத்தமுள்ளவனும், உங்களுள் அல்லா(ஹ்)வை அதிகம் அறிந்தவனும் நானாகவே இருக்கிறேன்" (ஆ'யிஷாரலி').

21. சுவர்க்கவாதிகள் சுவர்க்கத்திலும் நரகவாதிகள் நரகத்திலும்புகுதுவார்கள்; பின்னர் அல்லாஹுதஆ'லா (மலக்குகளுக்குச்) சொல்வான்: எவனொருவனுடைய ஹிருதயத்தில் கடுகின் ஓர் தான்ய அளவு ஈமான் இருக்கிறதோ அவனை (நரகத்தைவிட்டும்) அப்புறப்படுத்துங்கள்; பிறகு அவர்கள் (நெருப்பில் வெந்து) கரியவர்களாக வெளிப்படுத்தப்படுவார்கள். பிறகு "ஹயாத்" (ஜீவியம்) என்னும் ஆற்றில் வீழ்த்தப்படுவார்கள்; பிறகு அவர்கள் (ஆற்றங்)கரையோரமாகத் தான்யம் முளைப்பதுபோல் முளைப்பார்கள். நீர் பார்க்கவில்லையா? அவைகள் (அந்தக் காய்ந்த விதைகள்) சுருட்டப்பட்ட மஞ்சள் நிறமாக வெளிவருவதை(ப்பார்க்கவில்லையா?) (அபீஸயீத் குத்ரீ-ரலி').

22. "நான் தூங்கிக்கொண்டிருக்கையில் மனிதர்களைப் பார்த்தேன்; அவர்கள் என் முன் காண்பிக்கப்படுகிறார்கள். மேலும் அவர்களின்மீது அங்கிகளிருக்கின்றன; சிலரின் அங்கிகள் மார்புவரை இருக்கின்றன; இன்னுஞ் சிலரின் அங்கி அதற்குக் கீழாக இருக்கிறது; மேலும் உ'மரிப்'னு கத்தாப் (ரலி') (அவர்கள் எனக்குக் காண்பிக்கப்பட்டார்(கள்). அவரின் மீதும் அங்கி யிருக்கிறது; அதை அவர் இழுத்துக்கொண்டுபோகிறார்." (ஸ'ஹாப'ாக்கள்) கேட்டார்கள்: யாரஸூலல்லாஹ்! அதற்கு என்ன அர்த்தம் செய்தீர்கள்? (நபி பெருமான்) சொன்னார்கள்: "தீன்" (மார்க்கம் என்று அர்த்தம் பண்ணினேன்) (அபீஸயீத் குத்ரீ-ரலி').

23. நிச்சயமாகவே ரஸூல்(ஸ'ல் அ'ம்) அவர்கள் அன்சார்களுள் ஒரு மனிதனருகில் (ஒருமுறை) சென்றார்கள். அம்மனிதன் தன் சகோதரனுக்கு "ஹயா" (வெட்கம்) விஷயமாக உபதேசித்தார். அப்போது ரஸூலல்லாஹ் ஸ'ல் அ'ம் சொன்னார்கள்: "(ஹயா விஷயமாக) உபதேசத்தை விட்டுவிடுக. ஏனெனின், நிச்சயமாக "ஹயா"வாகிறது ஈமானில் என்றுமுள்ளதாயிருக்கும்" (இப்'னுஉ'மர்-ரலி').

24. ஜனங்கள் வணக்கத்திற்கு உரியவன் அல்லா(ஹ்)வைத் தவிர யாருமில்லை என்றும் மு'ஹம்மத்'(ஸ'ல் அ'ம்) அல்லாவின் தூதரென்றும் சாக்ஷி சொல்லுகிற



வரையிலும், மேலும் தொழுது ஜகாத் கொடுக்கிறவரையிலும் அவர்களுடன் போராட உத்தரவிடப்பட்டிருக்கிறேன்; ஆதலின் அவர்கள் இவ்விஷயங்களை(ச்சரிவர)ச் செய்வார்களாயின் அவர்களுடைய ரத்தத்தையும் சொத்தையும் என்னிடமிருந்து காப்பாற்றிக்கொண்டார்கள்; ஆனல் இஸ்லாமிய ஹக்கைத்தவிர, அவர்களின் கணக்கு அல்லா(ஹ்)வின் வயத்தில் இருக்கிறது (இப்'னுஉ'மர்-ரலி').

25. "எந்த நடத்தை மேலானது?" என்று ரஸூல் (ஸ'ல்அ'ம்) கேட்கப்பட்டார்கள். (பதில்) சொன்னார்கள்: "அல்லாவைக்கொண்டும் அவனுடைய ரஸூலைக்கொண்டும் ஈமான் (உறுதி) கொள்ளல்." பிறகு எது? என்று கேட்கப்பட்டது. சொன்னார்கள்: "அல்லாவின் பாதையில் யுத்தஞ் செய்தல்." பிறகு எது? என்று கேட்கப்பட்டது. சொன்னார்கள்: "சுயமான ஹஜ்" (குற்றங்கள் கலக்கப்படாதது) (அபீஹுரைரா-ரலி').

26. ரஸூல் (ஸ'ல்அ'ம்) அவர்கள் சில மனிதர்களுக்குச் சொத்துக் கொடுத்தார்கள். அப்போது சஅத் உட்கார்ந்திருந்தார். ஆனல் ரஸூல் (ஸ'ல்அ'ம்) அவர்கள் எல்லாரைக்காட்டினும் என்னிடத்தில் அதிக பாத்தியமுள்ள ஒரு மனிதனை விட்டுவிட்டார்கள். ஆனதால் நான் சொன்னேன்: "யாரஸூலுல்லாஹ்! இன்ன மனிதரைவிட்டு(த்திரும்பி)விட்டீர்களே; (காரணம்) யாதாயிருக்கும்? அல்லாவின் மீது ஆணையாக அவரை மூமினென்று அறிகிறேன்." (அதற்கு ரஸூலல்லா அவர்கள்) "முஸ்லிமாகப் பார்க்கிறாயா?" என்றார்கள். நான் சற்றுநேரம் மௌனமாயிருந்தேன். ஆனல் அவர் விஷயமாக நான் தெரிந்திருந்தவைகள் என்னை வற்புறுத்தியதனல் (அதே) என் வார்த்தையைத் திருப்பிச்சொன்னேன்: "இன்ன மனிதரை விட்டுத் திரும்பிவிட்டீர்களே; (காரணம்) யாதாயிருக்கும்? அல்லாவின் மீது ஆணையாக அவரை மூமினென்று அறிகிறேன்." (அதற்கு ரஸூலல்லா அவர்கள்) சொன்னார்: "முஸ்லிமாகப் பார்க்கிறையா?" நான் சற்று மௌனமாயிருந்தேன். பிறகு அவர் விஷயமாக நான் தெரிந்திருந்தவைகள் என்னை வற்புறுத்தியதனல் என் (அதே) வார்த்தையைத் திரும்பச்சொன்னேன். ரஸூலுல்லா (ஸ'ல் அ'ம்) அவர்களும் அதையே சொன்னார்கள். பிறகு சொன்னார்கள்: "ஏ சஅ'த்! இம் மனிதனை அல்லாஹுதஆ'லா நரகத்தில் தலை கீழாக எறிந்துவிடுவான் என்பதைப் பயந்து நான் கொடுத்துவிடுகிறேன். (ஆனல் இல்லாமைக் கவனித்து) இவரைக்காட்டினும் மற்றவர்களே என்னிடம் அதிகப் பிரியமுள்ளவர்களா யிருக்கிறார்கள்" (ஸஅ'த் இப்னு அபீவ:க்காஸ் ரலி').

27. (ஒருமுறை) நரகத்தைக் காண்பிக்கப்பட்டேன். அப்போது நரகவாதிகளுள் அனேகர் பெண்களாகவே யிருக்கிறார்கள்; அவர்கள் மாறுபாடு செய்கிறார்கள்; "அல்லா(ஹ்)வைக்கொண்டா மாறுசெய்கிறார்கள்? என்று கேட்டார்கள். (ரஸூலல்லா)சொன்னார்கள்: புருஷனுக்குமாறு செய்கிறார்கள்; மேலும் நன்றிக்கும் மாறு செய்கிறார்கள். (மனிதனே!) அவர்களுள் ஒருத்திக்குக் காலமெல்லாம் நன்றி செய்திருந்தால் பிறகு அவள் உன்னிடம் ஏதோ ஒரு குற்றத்தைக் கண்டுவிடுவாளாயின் (உடனே) 'உன்னிடமிருந்து ஒரு நன்மையையும் நான் பார்க்கவில்லை' என்று சொல்லிவிடுவாள் (இப்னுஅ'ப்'பா'ஸ்-ரலி').




# முஸ்லிம்களின் முக்கிய குறைகள்

الا تزر وازرة وزر اُخرى * وان ليس للانسان الا ما سعى *

"சுமையைச் சுமக்கும் ஓர் ஆன்மாவானது வேறோர் ஆன்மாவின் சுமையைச் சுமக்கமாட்டாதென்றும், மனிதனுக்கு அவன் முயற்சித்ததைத் தவிர (வேறொன்றும்) இல்லையென்றும் (அவன் அறிவிக்கப்படவில்லையா?) (53: 38,39).

இக்காலத்தில் நாம் கண்கூடாகக் காணும் இப்படிப்பட்ட பரிதாபகரமான நிலைமைக்கு இஸ்லாமிய உலகத்தை இழுத்துக்கொண்டு வந்திருக்கும் நூற்றுக்கணக்கான காரணங்களுள் நேர்மையான பிரயாசையின் கண்ணியமான தன்மையில் முஸ்லிம்கள் கொண்டிருக்கும் உதாசினமான அபிப்பிராயமே ஒரு முக்கியமான காரணமாய்க் காணப்படுகின்றது. "ஆசியர்களின் அமைதியும் திருப்தியும்" என்னும் வாக்கியமானது சுறுசுறுப்பின்மையையும் சோம்பேறித்தனத்தையும் உற்சாகமற்ற தன்மையையும் குறித்துக் காட்டக்கூடிய ஒரு மங்களகரமான வாக்கியமாய்க் காணப்படுகிறது; ஆயினும் கீழ்நாட்டு வாசிகளின் குணாதிசயத்தை ஊன்றி நோக்குங்கால் இவர்களுக்கு இப்படிப்பட்ட அடைமொழிகளைக் கொடுப்பதில் ஒன்றும் அசம்பாவிதமில்லையென்றே கூறலாம். பின்னும் முஸ்லிம்களுக்கே முக்கியமாக மேற்கூறிய அடைமொழியை அன்வயிக்கலாம். ஒரு சாதாரணமான முஸ்லிம் மனப்பான்மையின் அபிப்பிராயத்தை ஆழ்ந்து நோக்குவோமாயின் அவர் இவ்வுலக வாழ்க்கையைப் பற்றி இன்ன அபிப்பிராயம் கொண்டிருக்கிறாரென்னும் விஷயத்தில் இரண்டுவிதமான முக்கிய அம்சங்கள் காணப்படும். இவ்விரண்டையும் முக்கியமான அம்சங்களென்பதைக் காட்டினும் அமுக்கியமான தவறுகளென்றே கூறுதல் வேண்டும்; ஏனெனின், அவர்பால் காணப்படும் இவ்விரு குணங்களும் இஸ்லாத்தின் படிப்பினைக்கே நேர்மாற்றமாய்க் காணப்படுகின்றன.

முதன் முதலாக ஒரு முஸ்லிம், தாம் இவ்விஸ்லா மார்க்கத்தை உடைத்தாயிருக்குங் காரணத்தினால் ஆண்டவனுடைய பிரத்தியேகமான சலிகைக்குப் பாத்திரராய் விட்டதாக எங்ஙனமோ நினைத்து மனப்பால் குடிக்கத் தொடங்கிவிட்டார். தாமே அல்லாஹு 'தஆ'லாவின் அரிய குழந்தையென்று நினைத்துக்கொள்ளுகிறார்; தம்முடைய இகலோகச் செய்கையானது எப்படிப்பட்டதாயிருந்தபோதிலும், அது ஃகுர்ஆன் ஷரீஃபின் போதனைக்கு எவ்வளவு மாற்றமாயிருந்தபோதிலும் "தாம் ஒரு முஸ்லிம்" என்னும் காரணத்தினால் ஆண்டவன் எல்லாவிதமான



சுக சௌகரியங்களையும் தந்து ஆத்ம சுகிர்தத்தையும் அளிக்கக் கடமைப்பட்டிருக்கிறானென்று மனோராஜ்யம் செய்து கொள்ளுகின்றனர். இவ்வாறு மனனம் செய்துகொள்வதனால் அவருடைய உயிர்வாழ்க்கையில் ஒருவிதமான நிச்சய மாறுதல் ஏற்படுவதைப் பிரத்தியக்ஷமாகப் பார்க்கிறோம். நாளுக்குநாள் உயிருக்கு மன்றாடும் இவ்வுலக வாழ்க்கையில் அப்படிப்பட்ட முஸ்லிம் மற்றையோரால் ஒரு மூலையில் ஒதுக்கித் தள்ளப்படுகிறார்; இதனால் நாளுக்குநாள் அவர் இவ்வுலகில் தமக்கிருக்கும் அந்தஸ்தைச் சிறிது சிறிதாக விட்டுக் கொடுத்துக்கொண்டே நழுவுகிறார். தம்முடைய மந்த புத்தியால் ஏமாற்றமடைந்ததை ஒரு சமயம் தெரிந்துகொள்ளுகிறார்; அப்பொழுதும் அவர் தம்முடைய ஆழ்ந்த நித்திரையினின்றும் விழிப்பதில்லை; இவ்வுலகில் கண்ணுக்கெதிரே காணப்படும் பிரத்தியக்ஷமான தோல்விகளைக் கண்டும் விழித்துக் கொள்ளமாட்டார்; இப்படிப்பட்ட ஏமாற்றங்களாலும் இழிவான தோல்விகளாலும் உணரக்கூடிய கருத்தையும் அறியமாட்டார். இஸ்லாத்தையும் முஸ்லிம்களையும் அல்லாஹு 'தஆ'லாவானவன் எப்படியேனும் காக்கக் கடமைப்பட்டிருக்கிறானென்பதை அதிகமாக அளவு கடந்து நம்புவார். ஆனால் தாம் செய்ய வேண்டிய கடமைகளைச் செவ்வனே நிறைவேற்றாவிடின் அவ்வாண்டவன் தம்பாலுள்ள ஆதிக்யத்தைப் பிடுங்கி வேறு ஜாதியாரிடம் கொடுத்துவிடுவானென்னும் ஃகுர்ஆனின் உண்மையை ஜாடையாக மறந்துவிடுவார். நாம் எவ்வளவு சோம்பலுடன் மயங்கிக் கிடந்தபோதிலும் நம்மையும் நம்முடைய மார்க்கத்தையும் காப்பாற்றவேண்டுவது அவனுடைய பொறுப்பென்று சமாதானம் செய்துகொள்வார். இஸ்லாத்திலில்லாத இப்படிப்பட்ட ஏதோ ஒருவிதமான மாயைதான் அவருடைய கண்களை மூடி முத்திரை வைத்திருக்கிறது. எனவே அவர் தம்முடைய வாழ்நாளில் கண்டும் கேட்டும் வரும் இஸ்லாத்தின் இகழ்ச்சியை ஒருபோதும் உண்மையென்று நம்புவதேயில்லை. தாம் ஒரு "முஸ்லிம்" என்னும் நாமத்தைச் சூட்டிக்கொண்டிருப்பதனால் மட்டும் சர்வலோக நாயகனுடைய பார்வையில் ஒரு பிரத்தியேகமான சலிகைக்கு ஆளாய்விட்டதாகத் தம்முடைய மனத்துக்குள் ஒருவகை மாயையை உண்டு பண்ணிக்கொண்டிருக்கிறார்; தாம் என்ன செய்தபோதிலும் முஸ்லிம் என்னும் காரணத்தினால் ஆண்டவன் தம்முடைய காரியத்தில் ஒரு பிரத்தியேகமான ஷிபாரிஷுடன் சொந்தமாக உதவிசெய்யக் கடமைப்பட்டிருக்கிறானென்று நினைக்கிறார். எனவே எல்லா முஸ்லிம்களின் எல்லாக் காரியங்களும் அல்லாஹு 'தஆ'லாவின் சொந்தக் காரியங்களாய் விடுகின்றனவாம். இதனால் ஆண்டவனே தம்முடைய காரியத்தின் வெற்றிக்கு ஜவாப்தாரியென்று நினைக்கத் துணிந்து விடுகிறார். தம்முடைய காரியத்தில் ஏதேனும் குற்றங் குறையிருந்தபோதிலும் அதையெல்லாம் தாம் ஒரு முஸ்லிம் என்னும் காரணத்தினால் ஆண்டவன் தன்னுடைய சொந்தக் கிருபையால் மன்னித்து விடுவான் என்று நினைக்கிறார். இதனால் விளையும் பயன் யாது? அவர் தமக்குரிய கடமையின் பிரகாரம் தம்முடைய முழுப் பலத்தையும் தமது காரியத்தில் செலுத்தாமல், ஆண்டவனுடைய அனுக்ரஹமானது எவ்வாறேனும் தமக்குதவியாக வந்து தம்முடைய மனமார்ந்த நோக்கத்தைச் சிதைவுறாமல் முடித்துவைக்குமென்று அதிக பக்தி நிறைந்தவரேபோல் ஆர்வங் கொள்ளுகிறார்.

அவர்பால் இரண்டாவதாகக் காணப்படும் குற்றமானது முதலில் கூறியதைக் காட்டினும் இலேசானதென்று எவ்விதத்

தாலும் கூறுவது முடியாது. இதனால் அவருடைய சக்தியும் சாமர்த்தியமும் அறவே ஒழிந்துபோகின்றன; ஏனெனின், அவர் தம்முடைய தலைவிதி யென்னும் ஒருவகைச் சட்டத்தைக் குறித்து முழுதும் தப்பபிப்பிராயம் கொண்டிருக்கிறார். தமக்கு என்ன நேர்ந்தபோதிலும் அஃதெல்லாம் சர்வ ஞானத்தை யுடைய அல்லாஹு'தஆ'லாவின் தீர்மானத்தின் பிரகாரமே வந்து சேருகிறதென்று பொதுவாகக் கருதிவிடுகிறார்; தமக்கு எப்படிப்பட்ட தீங்கு நேர்ந்தபோதிலும் அதற்கு ஆண்டவனைக் காட்டினும் தம்மிடத்திலேயே வேறேதேனும் காரணம் உண்டோ இல்லையோ என்பதையும் சற்றும் நிதானித்துப் பார்ப்பதில்லை. மனிதன் பெற்றுக்கொள்ளும் ஒவ்வொரு விதமான நஷ்டத்துக்கும் அவனுடைய செய்கையே காரணமாயிருக்கிறதென்று குர்ஆன் ஷரீ'பானது கூறி வரும்போதும் அவர் தம்முடைய தீமையனைத்தும் ஆண்டவனிடத்திலிருந்தே உதயமாயிற்றென்று நம்புகிறார். இதனால் தம்முடைய குற்றத்தைக் கண்டு அதிருப்தியடைவதுமில்லை; இதனால் தம்மைத் திருத்திக் கொள்ள முயல்வதுமில்லை. நமக்குண்டாகும் ஒவ்வொரு தோல்வியும் நாம் முன்னேறுவதற்குரிய ஒருநிச்சயமான படியாயிருக்கிறதென்பதையும் அவர் உணர்ந்து கொள்வதில்லை. இத்தகைய காரணத்தினால்தான் அவர் எப்படிப்பட்ட வீழ்ச்சியையும் தாழ்ச்சியையும் ஒரு லஜ்ஜையாகக் கருதாமல், "எல்லாம் தலைவிதிப்பயனே" என்று தர்ம சித்தாந்தம் பேசிக்கொண்டு சோம்பேறித் தனத்துள்ளும் மிடிமைத்தனத்துள்ளும் அதிக பாதாளத்துள் ஆழ்ந்துபோகிறார்.

மேற்கூறிய இருவகையான தீமைகளும் முஸ்லிமின் சக்தியையும் சாமர்த்தியத்தையும் நொறுக்குவதற்கும் பெரும்பான்மையான காரணங்களா யிருக்கின்றன. அவருடைய நெற்றியில் ஆண்டவன் அன்று எழுதிய எழுத்தே இன்று இங்ஙனம் வந்து மூளும்போது அதற்காக அவர் வருந்துவானேன்? அல்லது கருணையங் கடலாகிய ஆண்டவன் தன்னுடைய பெருஞ் சாகரமாகிய அருட்கடலினின்றும் ஏதேனுமொன்றை அனுப்பி அம்முஸ்லிமுக்கு உதவி செய்துவிடுவான்; எனவே அவர் கஷ்டப்படுவானேன்? முஸ்லிமுக்கு உதவி புரிவதும் அல்லது துன்பம் விளைவிப்பதும் அவனுடைய பாரமா யிருக்கும்போது இவருக்கு என்ன வாட்டமிருக்கப்போகிறது! இப்படிப்பட்ட அபிலாஷையான எண்ணங்களில் அளவு கடந்த நம்பிக்கையை வைத்துவிடுவதால் மனிதர்களுடைய எத்தனைவிதமான ஏற்பாடுகளெல்லாம் எப்படி எப்படியோ நசித்துப் போயிருக்கின்றனவென்பதை அன்னார் ஒரு சிறிதும் உணர்வதில்லை. ஆயினும் முஸ்லிமானவர் தம்முடைய அனுபவத்தின் தோல்வியைக் கண்டு தேர்ச்சி பெறுவதில்லை; தாம் முயலாத பக்ஷத்தில் ஒரு காரியமும் கைகூடாதென்பதைக் கண்கூடாகப் பார்த்திருந்தும் இறுதி வினாடிவரையில் சும்மாவிருந்துகொண்டே காரியங் கைகூடிவிடுமென்று எதிர்நோக்கிய வண்ணமாயிருப்பார். ஆனால் அந்தோ! "வலபன்ஸு'ரன்னல்லாஹு ம(ன்)ய் யன்ஸு'ருஹு" (மேலும் நிச்சயமாகவே அல்லாஹு'தஆ'லாவானவன் தனக்கு உதவுகிறவனுக்கே உதவி செய்கிறான்) என்னும் வேதவாக்கியம் அவருடைய ஞாபகத்தில் வருவதில்லை. எனவே இறுதியில் எதிர்பாராத அபஜயமே ஆகாயத்தினின்றும் பேரிடி வீழ்வதேபோல் அவர் தலைமேல் விழுகின்றது.

அவருக்கு அப்படிப்பட்ட தப்பெண்ணத்தால் அடிக்கடி உண்டாகும் அபஜயத்தைக்கண்டு அவர், "தான் முயன்றதையே யல்லாமல் மனிதன் வேறொன்றையும் பெற்றுக்கொள்ள மாட்டான்," என்னும் :குர்ஆன் ஆயத்தை ஒரு சிறிதும் உணர்ந்து கொள்வதில்லை. அவர் புத்திமானாயிருப்பின் 'ஆண்டவன் எல்லாப் படைப்புகளுக்கும் ஆகாராதிகளை யளிப்பது வாஸ்தவமேயாயினும், ஒருவர் கையைக் கட்டிக்கொண்டு அறைக்குள் எப்பொழுதும் சோம்பிக்கிடப்பாராயின் அன்னாரின் வாயைப்பிளந்து கொண்டு ஆண்டவன் ஒருபோதும் தன்னுடைய ஆகாரத்தைத் திணிப்பதில்லை,' என்னும் உண்மையை உணர்ந்து கொள்வார். ஆயினும் தலைவிதி என்பதில் அவர் அளவுகடந்த நம்பிக்கையை வைத்து விட்டதன் காரணமாகத் தம்முடைய முயற்சியில் வைக்கக்கூடிய நம்பிக்கை முழுதையும் அடியோடு விட்டுவிட்டார்; இதனால் அவர் குருடாய்க் கிடக்கின்றார். எனவே தம்முடைய முதிய அனுபவத்தினின்றும் யாதொரு பாடத்தையும் கற்றுக்கொள்வதில்லை. இதனால்தான் அவருடைய புத்தி மஸ்தாய் விடுகிறது. தாமே அல்லா(ஹ்)வின் பிரத்தியேகமான அனுக்ரஹத்துக் குரியவரென்றும், எல்லாம் அவன் ஆதியில் எழுதிய எழுத்தின் பிரகாரமே நடக்குமென்றும் கெட்டியாக நம்பிவிட்டதனால் உயிருக்கு மன்றாடும் இவ்விகலோக வாழ்க்கையில் அவர் நாளுக்கு நாள் பாதாளத்தை நோக்கி நழுவிக்கொண்டே போகிறார்.

ஆனால் முஸ்லிம் சகோதரர்கள் இவ்வுலகத்தில் நிகழ்ந்துவரும் காரியங்களின் உள்ளர்த்தத்தை நன்றாகக் கண்ணோட்டமிட்டுப் பார்க்கவேண்டுமென்று யாம் அதிவினயமாய் வேண்டிக்கொள்ளுகிறோம். இவ்வுலக யாத்திரைக்குரிய ரஸ்தாவானது சலவைக் கற்களால் தளவரிசையிடப்பட்டுப் பாரசீக இரத்தினக்கம்பளங்களால் அதன்மேல் மூடப்பட்டு அதற்குமேல் ஹம்ஸதூளிகையும் ரோஜா இதழ்களும் தூவப்பட்டில்லை; அல்லது இவ்வுலக யாத்திரையானது விழாக்காலங்களில் காணப்படும் சுழன்று சுழன்று வரும் "திரு ஊஞ்சல்" விளையாட்டென்றும் கருதி விடவேண்டாம். இதற்கு மாறாக இந்த யாத்திரையானது போட்டியும் பொறாமையும் நிரம்பியுள்ள மிக்க கடினமான பிரயாணமாகும்; இங்கே ஆண்மைத் தனத்துக்குரிய மனோதிடத்துடன் எதிர்த்தும் எதிர்க்கப்பட்டும், அடித்தும் அடியுண்டும், ஜயித்தும் ஜயிக்கப்பட்டும் வருகின்றோம். இஸ்லரமார்க்கத்தில் பிரத்தியேகச் சலுகையென்பது ஒன்றுமில்லை. இஸ்லாத்தின் இறைவனோ எல்லா உலகங்களையும் படைத்துக் காத்து ரக்ஷித்தருளக்கூடிய ரப்பு'ல் ஆ'லமீனாய் இருக்கிறான். பிரபஞ்ச முழுதுமே அவனுடைய கருணைக்குப் பாத்திரமாயிருக்கிறது. மனிதனால் கொண்டாடப்படும் மேன்மை யென்பதும் கீழ்மை யென்பதும், பணக்காரன் என்பதும் ஏழை என்பதும், உயர் வென்பதும் தாழ் வென்பதும், "முஸ்லிம்" என்பதும் "கா'பிர்" என்பதும் அவனுடைய பார்வையில் வேறுபட்டுக் காணப்படுவதில்லை. ஒவ்வொரு மதத்தினரும் தாம்தாம் ஆண்டவனுடைய பிரத்தியேக கருணைக்குப் பாத்திரமானவர்களென்று கருதிவருகின்றனர்; முன்னொரு காலத்தில் மகா பராக்கிரமத்துடன் விளங்கிய யூதஜாதியாரின் சரித்திரத்திலிருந்து நாம் நல்லபடிப்பினையைக் கற்றுக்கொள்ளலாம். அவர்கள் இத்தகைய இறுமாப்பிலேயே ஆழ்ந்திருந்தார்கள்; தாங்களே தெய்வத்தின் குழந்தைகளென்றும், அதன் நண்பர்களென்றும் பெருமை பாராட்டிவந்தனர்; அன்னாரின் வீழ்ச்சியினின்றும் நாம் விழிப்பை யடைதல் வேண்டும்.

நிச்சயமாகவே நாம் இஸ்லாத்தின் உண்மையான நேர்வழியினின்றும் நெடுந்தூரம் விலகிவிட்டோம். இதன் உண்மையை அறிய விரும்புவீர்களாயின் இஸ்லா

மிய வாழ்க்கைக்கொரு முன் மாதிரியா
யிருந்துவந்த நம் நபிகள் திலகத்தின் ஒ
ழுக்கத்துக்கு நம்முடைய நடையும் ஒழு
க்கமும் எம்மட்டும் ஒத்திருக்கின்றன
வென்று நீங்களே சற்று நிதானபுத்தி
யுடன் சிந்தித்துப்பார்ப்பீர்களாக. "உண்
மையாக உங்களுக்கு அல்லா(ஹ்)வின்
தூதரிடத்தில் ஓர் அழகிய முன் மாதிரி
யான நமூனு இருக்கிறது," என்று நம்
முடைய திருவேதமே பறை முழக்குகி
ன்றது. 13 நூற்றுண்டுகளுக்கு முன்னி
ருந்த அந்த **"முதல் முஸ்லிமின்"** உயிர்
வாழ்க்கையின் சரித்திரத்திலிருந்து நாம்
பற்பல கருத்துக்களையும் கற்றுக்கொள்
ளலாம். அவர் ஓர் மஹதைசுவரியம்
படைத்த இராஜகுடும்பத்தில் பிறக்கவி
ல்லை; அல்லது மரகத ஊஞ்சலிலேயே பா
லூட்டித் தாலாட்டப்படவில்லை. அன்னை
யும் பிதாவுமற்ற அகதியின் ஸ்தானத்தி
லிருந்து ஆண்டவனுடைய திருத்தூத
ராய் அமையும் வரை அன்னூர் ஓர் மின்
சாரப்படிமீது வைத்து அலங்காமல் தூக்
கிக்கொண்டு போகப்படவில்லை. ஒவ்வொ
ரு படியிலும் அவர்களுக்கு எதிர்ப்பே
அதிகமாய் இருந்து வந்தது; தங்களு
டைய மலைமீதேற வேண்டிய வழியைத்
தாங்களே செப்பனிட்டுக்கொண்டு மே
ன்மேலும் சென்றுர்கள்; தங்களுடைய
சொந்தப் பிரயாசையினுலேயே அந்த
அரபு நாடுமுழுமைக்கும் போாசிரியராக
வும் ஏகாதிபதியாகவும் பிற்காலத்தில்
விளங்கிவந்தார்கள். மற்றையோரைப்
புறக்கணித்துவிட்டுத் தாங்கள் மட்டும்
முன்னுக்கு வந்துவிடவில்லை; தங்களுட
ன் தங்கள் ஜாதியாரனைவரையுமே இழுத்
துக்கொண்டு சென்று உலக முழுவதும்
மெச்சத்தக்க ஓர் உயரிய ஒழுக்கத்திலும்
கண்ணியத்திலும் சேர்த்துவிட்டார்கள்.
பிரயாசை! அரிய பிரயாசை!! பிரயாசை
என்பதுதான் எப்பொழுதும் அவர்களு
டைய ஞாபகத்தில் ஓயாமலிருந்து வந்
தது. அவர்களுடைய மனப்பூர்வமானபிர
யாசையையும் ஊழியத்தையும் ஓயாமல்
உணர்ந்திராத ஒரு நுண்ணிய மணலையும்
அந்த அரபு நாட்டில் காண்பதரிதாகும்.
அவர்களுடைய ஓயாத ஊழியமும் ஒழி
யாத ஊக்கமுமே அவர்களிடத்தில் கா
ணப்படும் இருவகையான மகா முக்கிய
அதிசயங்களாய் விளங்குகின்றன. ஓர்
உன்னதமான கொள்கைக்காகக் கொடி
பிடித்திருப்பதாக அதிக ஊர்ஜிதமாய்
எண்ணினுர்கள்; எனவே இறுதியில் தரு
மமே ஜயமாகுமென்னுங் கொள்கையில்
முழுதும் ஈடுபட்டுவிட்டார்கள். அதற்கு
அனுசரணையாக ஆண்டவனும் அவர்க
ளுடைய இறுதி வெற்றியைக் குறித்து
முன்னறிக்கை செய்திருந்தான்; ஆயினும்
அவர்களுடைய ஜீவதசையில் ஒரு விஞ
டியேனும் பிரயாசையில்லாமல் கழிந்த
தேயில்லை. ஆண்டவனுடைய காரியமா
னது இறுதியில் வெற்றியடையுமென்
னும் முழு நம்பிக்கையும் ரஸூல் நாயக
மவர்களுக்கு நிச்சயமாக இருந்துவந்த
போதிலும் தாங்கள்மட்டும் தங்களுடை
ய பிரயாசையின் முயற்சியினின்றும் ஒரு
விஞடியேனும் ஒழிந்திருந்ததில்லை; ஆண்
டவனுடைய காரியத்தை முடித்துவை
க்க அவனுக்கே பொறுப்புண்டென்று
ஒருபோதும் அலக்ஷியமா யிருந்ததில்லை;
மனித புத்தியால் செய்யப்படக்கூடிய
எல்லாவற்றையும் செய்தே முடிப்பார்
கள். ஆண்டவனுடைய நபியென்று சலி
கைபேசிக்கொண்டு சோம்பேறித் தனத்
தால் உறங்கிக்கொண்டிராமல் ஒவ்வொ
ரு நுண்ணிய விஷயத்தையும் தாங்களே
நேரில் கவனித்து வருவார்கள். தாங்கள்
எடுத்துக்கொண்ட ஒவ்வொரு காரியத்தி
லும் தங்களுடைய முழுப்பலத்தையும்
பூர்ண ஆவியையும் அதற்கென்றே ஈடு
படுத்துவார்கள். இவ்வுலக வாழ்க்கையில்
எப்படிப்பட்ட வகையைக் கொண்டு ஆ
ராய்ச்சி செய்து பார்த்தபோதிலும் அவ்



வவ் வகைக்கெல்லாம் அவர்களுடைய
நமூனுவானது இவ்வாறிருந்த தென்ப
தைக்கண்டு கொள்வீர்கள்: இகபரசாத
கங்களின் தத்துவத்திலாகட்டும், சட்ட
நிபுணத்துவத்திலாகட்டும், ஆசிரியத்
தொழிலிலாகட்டும், போர்வீரத்தனத்தி
லாகட்டும், சேனுதிபதியென்னும் முறை
யிலாகட்டும், இன்னமும் ஓர் உறவினராக
வோ, நண்பராகவோ, பிதாவாகவோ, புரு
ஷாகவோ, பகைவராகவோ இருக்கக்கூ
டிய எப்படிப்பட்ட நிலையிலாகட்டும் உங்க
ளுக்கு வேண்டிய முன்மாதிரி அந்த நபிக
ள் பிரானிடம் காணப்படாமலிராது. ஒவ்
வொருகாரியத்திலும் அவர்கள் ஒரு பே
ராசிரியராகவே இருந்துவருகிறுர்கள். தங்
களுடைய கடமை இன்னதென்பதை ந
ன்குணர்ந்து அதன்படியே பிரயாசையுட
ன் நடந்துவந்ததனுல்தான் அவர்கள் அத்
துணைப் பெரிய யோக்கியதையை அடை
ந்தார்கள். யுத்தமுகத்தில் காக்கியணிந்த
ஒரு போர் வீரனைப்போலவே சதா சர்வ
காலமும் தங்களுடைய கடமையின்மீது
கண்ணுங் கருத்துமா யிருந்துவந்தார்கள்.
இலகுவான வாழ்க்கை யென்பதே அவர்
களுடைய அகாதியில் காணப்படவில்
லை. அதிகமாகப் பிரயாசைப்படக்கூடிய
கடினமான வேலையிலேயே இன்பமிருக்
கிறதென்று நினைத்தார்கள்; சுருங்கச்
சொல்லுமிடத்து பிரயாசையின் உருவ
மாகவே காணப்பட்டார்கள். இரவில் மி
ருதுவான படுக்கையையும் விரும்பமாட்
டார்கள்; நள்ளிரவில் செய்யவேண்டிய
வணக்கமானது மிருதுவான படுக்கையி
லுறங்குவதால் எழுந்திருக்க முடியாமல்
தவறிவிடுமென்று சொல்லுவார்கள். அந்
த அ'ரப்' தேசத்தின் முடி சூடாமன்ன
ராயிருந்த நபிகள் திலகமவர்கள் ஒரு
வெறும் பேரீச்ச ஓலையால் முடைந்த பா
ய்மீதே படுத்துறங்குவார்கள். மஸ்ஜிதை
க் கட்டவேண்டுமென்றுல் தாங்களும்
கல், மண் சுமப்பார்கள்; தங்களுடைய
பாதரக்ஷைகளைத் தாங்களே பழுது பார்
த்துக்கொள்வார்கள்; மேலும் தங்களு
டைய குடும்ப காரியங்களில் பெண்மணி
களுக் குதவிபுரிவார்கள். எப்படிப்பட்ட
வேலையையும் தாங்கள் செய்யத் தகாத
தென்று ஒருபோதும் கருதினதேயில்லை.
தங்களுடைய கையில் கிடைத்த எல்லா
வேலையையும் மிக்க விருப்பத்துடனே
செய்வார்கள். ஆண்டவனுடைய இறுதி
வேதத்தின் உறுதியான கட்டளையை எல்
லா மனித கோடிகளுக்கும் சேர்ப்பிக்கும்
பொருட்டு அவ்வாண்டவனுல் பொறுக்கி
யெடுக்கப்பட்ட அந்த மகா புருஷசிரேஷ்
டரானவர் நடந்துகொண்ட வண்ணம்
இவ் வண்ணமாய்க் காணப்படுகின்றது.

உண்மை இவ்வாறிருக்கும்போது ஆ
ண்டவன் தன்னுடைய காரியத்தைத்தா
னே வெற்றி பெறச் செய்வானென்று மி
டிமையினுல் நாம் சோம்பி யிருப்போமா
யின் இதற்கு யார் ஜவாப்தாரியா யிருத்
தல் கூடும்? நம்முடைய அலக்ஷியத்துக்
கும் அசிரத்தைக்கும் மேற்போக்கான
வேலைக்கும் நாமேயல்லாமல் வேறுயார்
காரண பூதமா யிருப்பர்? எனவே "விழா
தோ! பழுக்காதோ!" என்று நம் முஸ்லி
ம்கள் ஆகாயத்தை அண்ணுந்து பார்த்த
வண்ணமாய் வாயைத் திறந்துகொண்டு
உட்கார்ந்திருப்பதில் என்ன பயன் விளை
தல் கூடும்? பிரயாசை சம்பந்தமான வி
ஷயத்தில் ஆண்டவன் முன் அனைவரும்
சமமேயாவர்; இதில் பக்ஷபாத மென்ப
தும் சலிகை யென்பதும் ஸிபாரிஷ் என்
பதும் ஒன்றுமில்லை. யார் யார் எதை எ
தை விதைக்கிறுரோ அதன்தன் மகசூ
லைத்தான் பெற்றுக்கொள்வார்; இயற்கை
யில் காணப்படும் இச் சட்டமானது ம
னித சுபாவத்துக்கும் ஒக்கும். சுயப்பிர
யாசையில்லாமல் எத்துணை உதட்டு வண
க்கத்தாலும், தொண்டைக்குக் கீழ் இற
ங்காத வாய் வணக்கத்தாலும் மட்டும்
அணுத்துணையும் ஆத்ம சுகிர்தத்துக்கா

ன நற்பயனைப் பெற்றுக்கொள்ளமாட்டோம். மந்திரத்தினால் மாங்காய் விழுமென்பது இஸ்லாமார்க்கத்தில் இல்லை; எல்லாம் முயற்சியினால்தான் சித்தித்தல் வேண்டும், "முயற்சியுடையார் இகழ்ச்சியடையார்." நபிகள் பிரான் தங்களுடைய அருமைக் குமாரியைப்பார்த்தும், அவருடைய சுயமான செய்கைகளே இறுதி நாளில் கணக்கெடுக்கப்படுமென்றும் அவருடைய பிறப்பின் பெருமையானது அவ் வேளையில் கடுகத்தனையும் பயன் தரமாட்டாதென்றும் வற்புறுத்திக் கூறினார்கள்.

அவரவர் சுமையை அவரவரே சுமந்து தீரவேண்டுமென்றும், ஒருவருடைய சுமையை மற்றொருவர் ஏற்றுக்கொள்வது முடியாதென்றும் :குர்ஆன் ஷரீ'பானது அடிக்கடி வற்புறுத்திக் கூறுகின்றது. (:குர். 35: 18 முதலியவற்றை நோட்டமிடுக). எனவே அவரவரின் பிரயாசையும் அவரவருக்கு அத்தியாவசியமாயிருக்கிறது. நாம் கால முழுதும் சோம்பித் திரிந்துவிட்டு மற்றையோரின் துணையால் இறுதியில் ஜயம் பெற்று விடலாமென்பது "வீழ்வார்க்கு வீழ்வார் துணை" என்னும் கதிக்குத்தான் கொண்டுபோய்ச் சேர்ப்பிக்கும். முயற்சியின் பெருமையை நம் ரஸூல் நாயகம் அவர்களிடத்திலல்லாமல் வேறெங்கே சென்று காணப்போகிறீர்கள்? தொட்டிலினின்றும் கட்டையிற் படுக்குமட்டும் அன்னாரின் உயிர் வாழ்க்கையானது கடினமான முயற்சியாகவேயிருந்துவந்தது. உண்மையில் மானுஷீகத்தனத்தின் பெருமை யனைத்தும் தன்னுடைய முயற்சியைத்தான் சார்ந்ததாயிருக்கிறது. எதைச் செய்ய நேர்ந்தபோதிலும் அதை நம்முடைய கடமையென்றே முழுக்கருத்துடன் செய்யத்துணிதல் வேண்டும். எனவே முஸ்லிம் சகோதரர்கள் தங்களுடைய மனத்திற்குள் ஊன்றிக் கிடக்கும் ஆதாரமற்ற அபிமான எண்ணங்களையெல்லாம் அடியோடு அகற்றிவிட்டு நபிகள் நாயகத்தின் முயற்சி நிறைந்த அடிச் சுவட்டைப் பின்பற்றுவார்களாக. தங்களுடைய கடமைகளின் முழுப் பொறுப்பையும் முற்றும் உணர்ந்துகொள்வார்களாக; இதற்காகத் தங்களுடைய ஒவ்வொரு தசை நாருக்கும் நரம்புக் கொடிக்கும் முழுப் பிரயாசையையும் கொடுப்பார்களாக. இவ்வாறு எல்லா முஸ்லிம்களும் செய்யத் துணிவார்களாயின் இவர்களுடைய ஒழிந்துபோன மகோன்னத நிலைமையானது மீண்டும் புன்சிரிப்புடன் தலைத் தோங்குதல்கூடும். ஒவ்வொரு நாளும் அவரவரும் தத்தம்முடைய முயற்சியின் பிரயாசையினால் நெற்றித் தண்ணீரை நிலத்தில் வீழ்த்தட்டும். தாங்கள் சுயமே பிரயாசை எடுத்துக் கொள்ளாதமட்டில் ஆண்டவனும் துணை புரிவதில்லை. எனவே மனிதனே தன்னுடைய தலைவிதி யென்பதை அடக்கியாள்கிறானல்லாது அவ்விதி யென்பதொன்று இவனை அடிமை கொண்டில்லை யென்பதை அறிந்துகொள்வர்.

"முயற்சிதிருவினையாக்கும்முயற்றின்
இன்மை புகுத்தி விடும்." [மை,







## ஸஅதியின் உபதேசம்

### இராஜ்யத்தை இழந்த ஓர் அரசன்.

பாரசீக தேசத்தில் அநேக ஆண்டுகளுக்கு முன்னர் ஓர் அரசன் ராஜ்யாதிகாரம் வகித்திருந்தான். அவன் நீதி என்பதைச் சற்றும் கவனியாமல் தன் மனம் போனவாறெல்லாம் எவ்வளவு தான் ஜனங்களிடமிருந்து கொள்ளையடிக்க முடியுமோ அவ்வளவையும் பறித்துக் கொண்டிருந்தான். அவனுடைய குடிமக்கள் அந்த அரசனுடைய பேராவாவையும் கொள்ளையடிக்குந் தன்மையையும் பொறுக்கமாட்டாமல் அவர்களுடைய வீடுவாசல்களை யெல்லாம் விட்டுவிட்டதுமன்றி அந்நாட்டையே விட்டேகினார்கள்; அத் தேசமக்கள், கொடிய அரசனால் யதேச்சாதிகாரமாக ஆளப்படும் நாட்டிலிருப்பதைக் காட்டினும் துஷ்ட மிருகங்கள் வாழுங் காட்டிற்கு ஓடிப் போவதே நலமெனக் கருதினார்கள். இவ்வாறு ஜனங்கள் நாட்டைவிட்டோடியதனாலும் இருந்த சொற்ப ஜனங்களும் அரசனிடம் அதிருப்தியடைந்தவர்களாயிருந்ததனாலும் அவ் விராஜ்யத்தின் பொக்கிஷம் நாளடைவில் ஒன்றுமில்லாமல் சூன்யமாய் விட்டது. இதையறிந்த சுற்றுப் புறங்களிலிருந்த அரசர்கள் அவனுடைய வலிவின்மையை ஒரு சௌகரியமாகக்கொண்டு அவனைத் தாக்க முயற்சித்தார்கள்.

இவ்வாறிருக்கையில் ஒருநாள் அந்த அரசனுடையமந்திரிபிரதானிகள் அவனுடைய சமுகத்தில் 'பிர்தௌஸீ என்னும் கவிவாணரால் இயற்றப்பட்ட "பாரசீக மன்னர்கள்" என்னும் ஒரு பெரிய கவியை உரக்க வாசித்துக்கொண்டிருந்தார்கள்; அப்போது அவர்கள் பாரிதின் என்னும் அரசனுடைய ஆளுகையைப்பற்றிய பாகத்தைப் படிக்கத் தொடங்குகையில் அதையே ஒரு தகுந்த சமயமெனக் கண்ட பிரதமமந்திரி இவ்வாறு சொல்லத் தொடங்கினான்: "பாரிதின் என்னும் அரசனுக்கு வேண்டிய பொக்கிஷமும், நிலங்களும், சேனைகளும் ஒன்றுமில்லாமலிருந்தும் எப்படிப்பட்ட துன்பங்களுக்கும் விரோதிகளுக்கும் இடையில் இராஜாங்கத்தை அவ்வரசன் ஜயத்துடன் பெற்றான். அஃதெப்படி?"

இதைக் கேட்டுக்கொண்டிருந்த அரசன் உடனே "நீங்கள் கேள்விப்பட்டிருப்பதேபோல் அவனுடைய குடிமக்கள் தங்களுக்கு அரசனிடமிருந்த அன்பினாலும் பக்தியினாலும் அவனுடன் சேர்ந்துகொண்டு மனமுவப்புடனும் பிரியத்துடனும் ஆதரவு கொடுத்து உதவி செய்ததனால் அவ்விராஜ்யம் பாதுகாக்கப்பட்டது," என்று விடையிறுத்தான்.

அரசனுடைய மொழிகளைக் கவனித்த மந்திரி, "ஓ அரசே! தாங்கள் சொல்வது போலவே ஓர் அரசனுடைய பாதுகாப்பானது அவ்விராஜ்யத்தின் குடி மக்களின் மனமார்ந்த ஆதரவினால்தான் இருக்கிறதென்ப துண்மையாயின் தாங்கள் ஏன் தங்களுடைய குடிபடைகளைத் தங்களிடமிருந்து விரட்டியடித்து விட்டீர்கள்? ஒருகால் தாங்கள் இராஜ்யாதிகாரத்தை இழந்து இனி அரசராயிருக்க விருப்பமில்லை போலும்," என்று வினவினான்.

ஓர் அரசனைத் தன்னுடைய ஜனங்கள் அன்புடன் மதித்து அவனைச் சூழ்ந்து கொள்ளவேண்டிய மார்க்கமாயிருக்கும் சாதனங்கள் யாவை? என்று அரசன் கேட்கவும் மந்திரியானவன், ஜனங்கள் அரச

ளைத் தன் இஷ்டப்படி ராஜ்யாதிகாரம் செலுத்தும்படி விட்டுவிடுவதற்குத் தாங்கள் சந்தோஷமாயிருக்கும்படியும் தங்களெண்ணப்படியும் அரசு புரிவானென்பதற்கு வேண்டிய நீதியும், அவனுடைய ஆளுகையில் யாதொரு விதமான குறையுமின்றி சுகமாக வாழ்வதற்கு வேண்டிய் கருணையும் ஆகிய இவ்விரண்டு குணங்களும் ஓர் அரசனுக்கு அத்தியாவசியமானவையென்று சொல்லிவிட்டு, அந்த அரசன் நீதியாயும், கருணையாயும் இல்லாமல் இருப்பதாகத் தெரிவித்தான்.

இவ்வாறு சாதாரணமாகப் பேசிய இவ்வுரைகள் அரசனுடைய கொடுங்கோன் மனத்தைத் திருத்தவல்ல ஆற்றல் இல்லாதவனவாய்ப் போகவே ஒரு சமயம் அம் மந்திரியையே விலங்கிட்டுச் சிறைக்கு இழுத்துக்கொண்டுபோகும்படியான கட்டளையிட்டான். விளக்குப் பிரகாசமாக எரிந்துகொண்டிருந்தபோதினும் அதற்கும் ஒரு தூண்டுகோல் வேண்டியிருப்பதுபோல அரசன் எவ்வளவு புத்திமானாயிருந்தாலும் அவனுக்கும் புத்தி சொல்லத் தக்க மதியூக மந்திரியொருவன் அத்தியாவசிய மென்பதை உணராத அரசன் தன்னுடைய மந்திரியைச் சிறையிலடைத்த சிலநாட்களுக்கெல்லாம் அவ்வரசனுடைய பெரிய தந்தையின் மக்கள் ராஜ்யாதிகாரத்துக்காகக் கலகம் செய்யத் தலைப்பட்டார்கள். அவர்கள் தங்களுடைய தகப்பனாரின் ராஜ்யத்தை அதன் சரியான உரிமையாளர்களாகிய தங்களுக்கு ஒப்புவிக்கும்படி கட்டாயப்படுத்துவதற்காக ஒரு சேனையைத் திரட்டிக்கொண்டு வந்தார்கள். இவ் வற்புறுத்தலுக்கு அவன் அவசியம் இணங்கவேண்டியதாகவே நேரிட்டது. இந்த அரசனால் துன்புறுத்தப்பட்ட குடி ஜனங்களெல்லாம் கலகக்காரர்களுடன் சேர்ந்துகொண்டு அத் துன்புறுத்திய அரசனை அவனுடைய சிம்மாதனத்தினின்றும் துரத்திவிட்டார்கள்.

நமது ரஸூல்நாயகம் (ஸல்அம்) அவர்கள் ஏற்படுத்திய முஸ்லிம் ராஜ்யமும் இஸ்லாமார்க்கமும் இற்றைக்குப் பதின்மூன்று நூற்றாண்டுகளாகியும் எத்துணையோவிதமான எதிர்ப்பிரசாரத்துக் கிடையிலும், உலக இராஜ்யாதி பத்யங்களெல்லாம் ஒன்றுயச் சேர்ந்து கிலாபத் இராஜ்யத்தை ஒழித்துவிட முயற்சித்தும் அழியாமல் இருந்து வருவதற்குக்காரணம் மு‘ஹம்மத்’ நபி(ஸல்அம்) அவர்களுடைய பக்ஷபாதமில்லாத நீதியும், பிரத்தியேக சலிகைகாட்டாத பொதுக்கருணையுமேதாம் என்பது உலகமறிந்த விஷயம்.

எனவே குடிகளின் விருப்பத்துக்கு மாறுகச் சுயேச்சாதிபத்யத்துடன் ஆளப்படும் இராஜாங்கமானது என்றைக்காயினும் அழிந்துதான் தீரும். ஆதலின் இராஜ்யத்தைச் சமாதானத்துடனும் சாந்தத்துடனும் கலகமின்றியும் அரசு புரிய வேண்டுமானுல் அரசாங்கத்தினர் குடிமக்களின் மனமார்ந்த ஒத்துழைப்பைப் பெறவேண்டு மென்பது இச்சிறு உபதேசக் கதையினுல் நன்கு விளங்குகின்றது. (குல்ஸ்தான்)







# பள்ளியாசிரியன்

(ரவீந்திரநாத் தாகூர் எழுதியது).

ஐம்பது வருஷங்களுக்கு முன்னர் யாரேனும் என்னிடம் வந்து என்னை ஜப்பான் தேசத்திலுள்ள உபாத்தியாயர்களின் சபையொன்றில் கல்வியைப்பற்றி என்னுடைய அபிப்பிராயத்தைப் பிரசங்கம் புரிவதற்காக அழைக்க விருந்ததாகச் சொல்லியிருந்தால் அஃது என்னை நடுங்கச் செய்திருக்கும். ஏனெனின், நான் என்னுடைய பதின்மூன்றுவது வயதிலிருந்து இப்போதுசிறந்தகவியென்றுபோற்றப்படுகிற இந்நாள்வரையில் எப்போதும் எந்த வித்தியாசாலைகளிலும் படித்ததில்லை என்பது அனேகருக்குத் தெரிந்திருக்கலாம்.

ஆகவே நான் சிறுவர்களுக்காக ஒரு வித்தியா சாலையை ஸ்தாபிப்பது என்னுடைய கடமை என்பதை யறிந்தபோது எனக்குக் கல்வி முறையைப்பற்றிய அனுபவம் சிறிதும் கிடையாது. ஒரு விதத்தில் அதுவும் எனக்கு நன்மையாகவே தோன்றிற்று. நான், கல்வி முறையில் அனுஷ்டிக்கப்படும் சில ஒழுங்கற்ற கட்டுப்பாடான முறைகளில் என் கருத்தை அழுத்திவிடாததனுல், என்னுடைய அனுபவத்தை என் சோதனைகளாலும் இதர கஷ்ட நிஷ்டூரங்களாலும் சொந்தத்தில் அறியவேண்டியதாயிற்று. நான் பாலியத்திலேயே தற்காலக் கல்விமுறையிலுள்ள குற்றங்களைப்பற்றி நன்குணர்ந்து தெளிந்துகொண்டவனுயிருந்தேன்; அதுதான் என்னை வித்தியாசாலையினின்றும் விலக்கி, என்னுடைய முதுமைப் பருவத்தில் ஒரு சொந்த வித்தியாசாலையை ஸ்தாபிக்க வேண்டுமென்ற முடிவுக்கு வரும்படி செய்தது. அந்த வித்தியாசாலையில், நான் மாணவனுகப் பட்ட கஷ்டங்கள் ஒன்றும் காணுதவாறு நல்ல முறையில் ஏற்படுத்தவும் ஹேதுவாயிற்று.

என்னுடைய ஐந்தாவது வயதில் நான் பள்ளிக்கு அனுப்பப்பட்டபோது என் மனம் அதற்கு மாறுக எண்ணத் தொடங்கிற்று. ஏனெனின், அங்கு வயதுக்குரிய விளையாட்டுக்களும், இடத்துக்குரிய பாடங்களுமின்றி இயற்கையின் அழகையும் நீக்கிவிட்டிருந்ததால் நான் பிறவிமுட்டாளாகவே இருக்க நேரிட்டது. கூட்டில் அடைபட்ட பறவைகளுக்கு வெளியிலிருந்து ஆகாரங்களைக்கொண்டுவந்து கொடுப்பதுபோல நானும் கல்விகற்றுக்கொள்ள ஒரு கூட்டில் அடைக்கப்பட்டேன். நான் அவ்வளவு சிறுபிராயமுள்ளவனுயிருந்தும் அப் பள்ளிகளில் அனுஷ்டிக்கும் முறைகள் என்மனத்தை வருத்தின.

இப்போதிருக்கும் கல்விமுறையானது நமது குழந்தைகளைக் குழந்தைகளென ஒத்துக்கொள்ள மறுக்கின்றது. குழந்தைகள் பெரியவர்களைப்போல நடந்துகொள்ளாததனுலும், இரைச்சல்செய்யக்கூடிய குழந்தைகளாயிருப்பதனுலும் தண்டிக்கப்படுகின்றனர். உபாத்தியாயர்கள், இந்த விளையாட்டுத்தனம் குழந்தைகளுக்கு இயற்கையான தென்பதையும், குழந்தைகள் ஓடியாடி விளையாடுகிற தன்மையினுல் புதிய விஷயங்களைக் கிரகிக்கவேண்டு மென்பதையும், ஞாபகத்திலிருத்துவதில்லை. ஆகையால் உபாத்தியாயருக்கும் இயற்கைக்கும் ஏற்படும் யுத்தத்துக்கு ஆரம்பமாக இக் குழந்தைகள் ஏற்படுகிறார்கள்.

ஒரு குழந்தையைக் கற்பிப்பதற்கேற்ற முறை அதனுடைய மனத்தை ஓரிடத்தில் நிலை நிறுத்துவதே என்று ஓர் உபாத்தியாயர் நினைக்கிறார்; ஆனால் இயற்கையோ அக் குழந்தையின் மனத்தை நாலு பக்கங்களிலும் செல்லவிடுவதே அதைக் கற்பிப்பதற் கேற்ற சிறந்த முறையெனக் கருதுகின்றது. நாம் குழந்தைகளாயிருந்தபோது நமது மனோ சக்தியை நாம் எதிர்பாராத நாலு சம்பவங்களிலும் சிதறவிடுத்துத்தான் அனேக சங்கதிகளை யறிந்துகொண்டோம். நமக்கு வாய்த்த அப்படிப்பட்ட சந்தர்ப்பங்களெல்லாம் உலக வாழ்க்கையில் உறுதியாக அறியவேண்டிய விஷயங்களை அறிய ஓர் அவசியத்தை ஏற்படுத்திவிட்டன. குழந்தைகளைச் செய்கையில் ஊக்கமூட்டக் கூடியவாறு அவர்களுடைய மனத்தை உண்டாக்கக்கூடிய புதிய விஷயங்கள் வந்துகொண்டே யிருத்தல் வேண்டும். ஆனால் நான் படிக்க நேரிட்ட வகுப்பின் அதிகாரியா யிருந்த உபாத்தியாயர் அப்படிப்பட்ட செய்கைகளைப் பொறுக்கமுடியாததாகக் கருதிவிட்டார். என்னைச் சாந்தமாக அமைதியுடன் இருக்கும்படி வற்புறுத்தியும் என் மனம் சதா அதற்குமாறான எண்ணத்தையே கொண்டிருந்தது. ஏனெனின், அவருடைய அந்த யதேச்சாதிகாரத்தை அங்கீகரிக்கவேண்டா மென்று என் இயற்கைத் தாய் எனக்கு ஊக்கமூட்டினாள்.

குழந்தைப்பருவத்தில் எல்லாவிதமான நோக்கங்களையுமறிய ஆவல் இருக்கவேண்டுவது அவசியம். ஆனால் வயது சென்றபின் நமது வாழ்க்கையை ஏதோ சில நோக்கங்களின் சுமையாகச் செய்துவிடுவதால் அதற்கப்பாலுள்ள நோக்கங்களை நாம் தள்ளிவிடுகிறோம். நமது நோக்கம் மனத்தின் எல்லாச் சக்திகளையும் தன்னிடமே இழுத்துவிடுகிறதேயன்றி நமக்குச் சுற்றிலுமுள்ள இதர விஷயங்களைக் கவனிக்க இடந்தருவதில்லை. அது நமது விசாலமான கவனத்தைத் தடுத்துக் குறுகிய பாதையில் செல்லவிடுகிறது. குழந்தைக்கு இன்னதுதானென்கிற நிர்ணயிக்கப்பட்ட நோக்கமில்லை யாதலின் அது சுற்றிலுமுள்ள எல்லா விஷயங்களையும் கவனிக்க இயலும்; அது அறிவைப் பெறுவதில் தன்னுடைய ஓய்வின்மையைத் தாராளமாகவிட்டு ஞானம்பெறச் செய்கிறது. சிறு கற்களின்மீது ஓடும் தண்ணீர் அங்குண்டாகும் தடைகளிலும் அதிக துரிதமாகப் போவதுபோல் காணப்படுகிறது.

ஆனால் உபாத்தியாயன் மட்டும் தன்னுடைய சொந்த நோக்கத்தையே உடையவனா யிருக்கிறான்; குழந்தையினுடைய மனத்தில் தன்னுடைய, முன்னரே தையார் செய்யப்பட்ட கோட்பாடுகளின் மாசை உண்டாக்க விரும்புகிறபடியால் தன் நோக்கத்துக்கு விரோதமாகக் குழந்தைகளிடம் எதைக் கண்டபோதிலும் அதையெல்லாம் ஒழித்துவிட முயற்சிக்கிறான். உலகத்தில் நடக்கும் நடவடிக்கைகளையும், வாழ்க்கையையும், இதர விஷயங்களையும் தன்னுடைய கல்வி முறையின் கோட்பாட்டினின்றும் தள்ளிவிட்டு, இயற்கையின் வய மிருந்து குழந்தையை நீக்கித் தன்னுடைய சிறைக் கட்டடத்தில் வைத்துவிடுகிறான்; அதை அவன் குழந்தைகளின் மனத்தை அபிவிருத்தி செய்யக்கூடிய சிறந்த மார்க்கமென்று கருதுகிறான். தான் வயது முதிர்ந்தவனா யிருப்பதனால் தன்னுடைய கல்விக்கு ஒரே நோக்கத்தைக் கொள்வதால்தான் குழந்தைகளையும் அவ்வொரே விஷயத்தில் கவனத்தைச் செலுத்தச்செய்வது நல்லதென்று தீர்மானித்து, குழந்தைகள் தனியான விஷயங்களைத் தனியான முறையில் அறியவேண்டுமென்பதை மறந்துவிடுகிறான். குழந்தைகளுடைய மனமானது பெரியோர்களுடைய மனத்



துடன் வேற்றுமைப் படுவதோடு முற்றிலும் மாறாகவு மிருக்கிற தென்பதை அவன் அறிகிறதில்லை.

இது புஷ்பத்தின் மீது பழம் பழுப்பதற்குவேண்டிய வழியைப் பலாத்காரமாகப் பிரயோகிப்பது போலாம்; புஷ்பமானது தன்னுடைய எல்லாப் பக்குவ முறைகளுக்கும் காத்திருக்கவேண்டியதாயிருக்கிறது; புஷ்பம் அதனுடைய வாயைச் சூரிய வெளிச்சத்துக்காகவும், காற்றுக்காகவும், சில வண்டுகள் வந்து மொய்ப்பதற்காகவும் திறந்து வைத்துக்கொள்ள வேண்டியதாயிருக்கிறது; புஷ்பம் அனேக சம்பவங்களைக் காணவேண்டிய நிலையில் இருக்கின்றது; ஆனால் பழமோ அதிலுள்ள விதையைப் பலப்படுத்துவதற்காகத் தன்னுடைய வாயை மூடிக் கொள்ளவேண்டியதா யிருக்கிறது. இது புஷ்பத்தினின்றும் முற்றும் மாறான வழியை அனுசரிக்கவேண்டியதாய் நேரிடுகிறது. புஷ்பத்துக்கு ஒரு வண்டு அணுகும் சமயமானது ஒரு பெரிய சௌகரியமான சமயமாயிருக்கிறது; ஆனால் பழத்துக்கோ அவ் வண்டின் பிரவேசமானது பெரிய ஆபத்தாயிருக்கிறது. வயது முதிர்ந்த மனமானது ஒரு பழத்தின் நிலைமையை ஒத்து, புஷ்பத்துக்குச் சமமான குழந்தைகளின் மனத்தினிடம் இரக்கமின்றி யிருக்கும். கிழ மனமானது குழந்தை மனத்தை இதர உலக வியவகாரங்களினின்றும் இயற்கையினின்றும் தடுப்பதுதான் அதைப் பக்குவ மாக்கக்கூடிய மார்க்கமென்று கருதுகிறது. இப்படிப்பட்ட பெரியவர்களின் கொடுமையினால் அனேகம் குழந்தைகள் கஷ்டப்படுவதைக் கண்டபிறகுதான் என்னுடைய நாற்பதாவது வயதில் நான் அப்படிப்பட்ட சில குழந்தைகளையேனும் அக் கஷ்டத்தினின்றும் என்னா லியன்றவரையில் நீக்கவேண்டுமென்று கருதினேன்.

பள்ளிக்கூட அறைகளில் அனேக விஷயங்களைத் தாமே அறிந்துகொள்ளக் கூடிய வசதிகளில்லை; அது யாதொரு பிரயோஜனமு மில்லாத வெறும் சிறையே யாகும். தினந்தோறும் காலையில் இன்ன குறிப்பிட்ட மணிக்கு மாணவர்கள் ஸ்கூலுக்குப் போகவேண்டுமென்றும், தினந்தோறும் சொன்னவற்றையே திருப்பித் திருப்பிச் சொல்லும் பாடங்களையே கேட்கவேண்டு மென்றும் ஏற்படுத்தப்பட்டிருப்பதுடன், இன்ன குறிப்பிட்ட மணிக்குத்தான் வெளியில் போகலாமென்றும், முன்னரே எழுதித் தொங்கவிடப்பட்டிருக்கும் கணக்குப்படிதான் ஓய்வு நாட்கள் விடப்படுமென்றும் எல்லா விஷயங்களும் இயந்திர முறைமைப்படி நடத்தப்படுகின்றன.

ஈதெல்லாம் வயதுமுதிர்ந்த பெரியவர்களுக்குச் சரிதான். ஒழுங்கான வேலை தவறாமலும், ஒரே முறைமைப்படியும் வேலை செய்வதெல்லாம் வியாபாரிகளுக்கு அல்லது ஒரு தொழிலில் ஈடுபட்டவர்களுக்கு லாபத்தைத் தரக்கூடிய முறைகளே. அவர்கள் அந்தந்த மாதங்களின் இறுதியில் லாபமடையப்போவதை முன்னரே அறிந்துகொள்வதும் சந்தோஷத்தைத் தரக்கூடிய விஷயம்தான். ஆனால் ஒரு குழந்தை அப்படியெல்லாம் ஒன்றையும் எதிர்பார்ப்பதில்லை; நாள்தோறும் மாதந்தோறும் திரும்பத்திரும்பக் கஷ்டப்பட்டபோதிலும் அஃது ஒன்றையும் அடைவதாகக் காணோம்; ஆனால் வருஷக்கோடியில் மகா பயங்கரமான இறுதி நாளாகிய பரீக்ஷை (யென்னும் எமன்) வந்து சேருகிறது. பிறகு அநியாயம் வருகிறது! மிகவும் கஷ்டப்பட்டுப்படித்த மாணவர்கள் ஏதோ கொஞ்சம் குறைவான மார்க்கை அடைந்ததனால் தேறுகிறதில்லை; ஆகையால் அவர்கள் தங்கள் கஷ்டத்திற்குச் சன்மானம் பெறுவதில்லை. இஃதொரு பெரிய அடிமைத்தனமே யாகும். இஃது ஒழுங்கின

மானது. இது தனி ஹோதாவில் ஒருவருக்குப் பணியக் கற்றுக்கொடுக்கிறது.

அதற்கு ஏதாவது ஒரு பெரிய அல்லது உண்மையான மதிப்புண்டா? குழந்தைகளுக்கு இயற்கையாயுள்ள தங்கள் இறகுகளை மடக்கிக்கொண்டு அவர்கள் இக்கூண்டில் அடைபட வேண்டியவர்களா யிருக்கிறார்கள். அவர்களுடைய மனத்தில் தாராள எண்ணத்தையும், எப்படிப்பட்ட ஆபத்துக்களிலும் முயற்சியெடுக்கக்கூடிய ஆற்றலடையும் ஊக்கத்தையும், தினந்தோறும் புதிது புதிதான அனுபவங்களைக் காணவேண்டுமென்னும் சிந்தனையையும் நாம் அடியோடு கொன்றுவிடுகிறோம். இப்படிப்பட்ட சுதந்தரங்கள் நல்ல ஒழுங்குடன் வளரக்கூடிய குழந்தைகளுக்கும், ஊக்கமுள்ள குழந்தைகளுக்கும் மிகவும் அத்தியாவசிய மானவை. ஆகையால் இப்போதுள்ள கோட்பாடுகளெல்லாம் தப்பானவைகளாயிருக்கின்றன. மனச்சாக்ஷி என்கிற இடத்தில் போலீஸ்காரர்கள்தாம் வரவேண்டி யிருக்கிறது. நாம் சிறைகளுக்குக் கைதிகளை நடத்திச் செல்வதுபோலவும், பைத்தியக்காரர்கள் சீர்திருத்தப்படும் சாலைகளுக்குள் அப் பைத்தியக்காரர்களை நடத்துவதுபோலவும் நாம் குழந்தைகளுக்குச் சுபாவமாயுள்ள, அவர்களே விஷயங்களைச் சேகரித்துக்கொள்ளும்படியான குணத்தைக் கொன்று தவறான வழியில் நடத்துகிறோம்.

நான் என்னுடைய பள்ளிக்கூடத்தை ஆரம்பித்தபோது, அக்கம் பக்கங்களிலும் தூரத்திலுமுள்ள எல்லாத் துஷ்டப் பிள்ளைகளும் என்னிடம் மாணவர்களாகச்சேரும் பாக்கியத்தை நான் பெற்றிருந்தேன். நமது பெற்றோர்கள் தங்களுடைய மக்களைத் தனிப்பட்ட பள்ளிக்கூடங்களுக் கனுப்புவதில்லை யாதலால் அடங்காத் தன்மையுள்ள துஷ்டப்பிள்ளைகளின் கூட்டம் அதிகமாய் விட்டது.

இப்படிப்பட்ட துஷ்டப்பிள்ளைகள் யார்? அவர்கள் மிக்க உற்சாக ஊக்கமுள்ளவர்களாதலின் மரியாதையான கூட்டங்களிலும் சாந்தத்துடனிருக்க முடியாதவர்கள். ஆதலின் அவர்கள் துஷ்டர்களாகப் பாவிக்கப்பட்டதுடன் அவர்களுடைய பெற்றோர்கள் அவர்களை அன்னார் ஒன்றும் செய்யாதிருக்கும்போதும் தண்டிக்கும்படியாகவும் என்னைத் தூண்டினார்கள். அவர்கள் துஷ்டப்பிள்ளைகளுடைய நன்னடத்தை என்னும் சக்திக்குத் தண்டனைதான் சிறந்த ஔஷதமென்று கருதினார்கள். ஆனால் அந்த உற்சாகமும் ஊக்கமும் குழந்தைகளுக்கு ஒரு பெரிய இயற்கையான வரப்பிரசாதம் என்பதையும், இந்த உற்சாகத்துக்கும் நமது வீட்டில் மரியாதையாக நடந்து கொள்ளவேண்டுமென்னும் கொள்கைக்கும் சதா போராட்டம் விளைந்துகொண்டே யிருக்கிறதென்பதையும் நீங்கள் மறந்துவிடுதல் கூடாது. இப்படிப்பட்ட போராட்டத்தினால்தான் எல்லாவிதமான சித்தப்பிரமைகளும் கொடுமைகளும் தோன்றுகின்றன.

நான்என்னுடைய அடங்காத மாணவர்களிடத்தும் எப்போதும் தண்டனையை உபயோகித்ததே கிடையாது. அனேகம் பெயர்கள் துஷ்டமாணவர்களைத் தண்டிப்பதிலும் ஒருவிதமான வரம்புக் குட்பட்ட சுதந்தர மிருக்கவேண்டுமென்று சொல்லுகிறார்கள். ஆனால் தடையென்பதே இயற்கைக்கு விரோதமானது. எப்போது மனமும் வாழ்க்கையும் பூரா சுதந்தரம் கொடுக்கப் பெற்றிருக்கின்றனவோ அப்பொழுதே அவை வன்மையை யடைகின்றன. நான் சுதந்தர சிகிச்சையென்னும் மருந்தை உபயோகித்து வந்ததாகச் சொல்லலாம். பிள்ளைகள் ஏறமுடியாத மரங்களின்மீது ஏறவும் எங்கும் ஓடித் திரியவும் அனுமதிக்கப்பட்டார்கள்; மரங்களிலிருந்து விழுந்தவர்கள் துக்கமடைந்தார்கள். அவர்கள் மழையிலும் நனைவார்கள்; குளங்குட்டைகளிலும் நீந்துவார்கள். முற்றும் துஷ்டப்பிள்ளைகளென்று கருதப்பட்ட இவர்கள் இயற்கையான வழிகளிலேயே சீர்திருந்தி வீட்டுக்குப் போகும்போது அவர்களுடைய பெற்றோர்கள் அவர்களிடத்திலுள்ள அனேக மாறுதல்களைக் கண்டு ஆச்சரியப்பட்டார்கள்.



சுதந்தரம் என்பது தடுக்கப்படாத ஓரிடத்தில் இல்லை. சிறுவர்களுக்குத் தடுக்கப்படாத மானிட சம்பந்தமான விஷயங்கள் அனேகம் அவசியமா யிருக்கின்றன. சிறுவர்களுக்குத் தம் தாயார் தம்மைக்காட்டினும் வயது முதிர்ந்தவளாயினும் அவளுடன் சர்வ சுதந்தரமும் கொண்டிருக்கிறார். உண்மையில் தாயார் மானுஷீக அந்தக்கரணத்தின் காரணமாக மனத்தில் யாதொருவிதமான தடங்கலுமின்றித் தன் குழந்தையின் நேசமுள்ளவளாகி விடுகிறாள். தாயாருக் களிக்கப்பட்ட இப்படிப்பட்ட அன்பானது இயற்கையானதால் குழந்தைகளுக்கு அஃது அவசியம் வேண்டியதா யிருக்கிறது. ஏனெனின், இவ் வன்பு சுதந்தரமானது. ஆகையால் நமது மாணவர்கள் தங்களுடைய தாயார்களைவிட்டுப் பிரிவதனால் சகஜமாக அவர்கள் அந்த இயற்கை அன்பைத் தங்களுடைய உபாத்தியாயர்களிடமிருந்து எதிர்பார்ப்பார்கள் என்பதை நான் உணர்ந்தேன்.

நான் என்னுடைய மாணவர்களுடன் விளையாடவும் ஆரம்பித்தேன்; நான் அவர்களுடைய வாழ்க்கையிலேயே பங்கிட்டுக்கொண்டேன்; எனக்கும் அவர்களுக்கும் வயதில் அதிக வித்தியாசமிருந்தபோதிலும் என்னைப் பார்த்து அவர்கள் அனாவசியமாகப் பயப்படவேயில்லை. மாணவர்கள் தங்களுடைய இல்லங்களில் எவ்வளவு தாராளமாக இருக்கமுடியுமோ அவ்வளவு சுதந்தரத்துடன் இங்கும் பழகினார்கள். மாணவர்களுக்குப் பாடம் கற்பிக்கும்போது ஆசிரியர்களும் பிள்ளைகளைப்போல் இருக்கவேண்டுமென்பதை நினைவில் வைத்துக்கொள்வதில்லை. பலர் கௌரவத்தைப் பார்க்கிறார்கள்; உபாத்தியாயர்கள் கற்றவர்களானதால் தங்களுடைய நடைஉடைபாவனைகளை மாணவர்களுக்குப் புகட்ட ஆரம்பிக்கிறார்கள். தற்காலப் பள்ளிக்கூடங்களில் எவ்வித வளர்ச்சியும் கிடையாது. பிள்ளைகள் பள்ளிக்கூடக் கட்டடத்தைத் தங்களை அடைத்து வைத்திருக்கும் கூடு என்று நினைக்கக்கூடாது. பள்ளிக்கூடத்தைத் தங்களுக்காக நிர்மாணிக்கப்பட்ட தங்கள் சொந்தக் கட்டடமென்று நினைக்கவேண்டும். நான் நடத்திவரும் பள்ளிக்கூடம் பிள்ளைகளுடையதே யென்றும் என்னுடைய தல்லவென்றும் அடிக்கடி சொல்வதுண்டு.

மாணவர்களை நல்லவிதத்தில் ஒழுங்காய் நடத்துகிறதாகப் பெருமை பாராட்டிக் கொள்ளும் உபாத்தியாயர்கள் உண்மையில் கொடுமையாளர்களாக இருப்பார்கள்; அவர்கள் தங்களுடைய கொடுமைகளை (த்தாராளமாக)உபயோகப்படுத்த மாணவர்கள்சாதனமாக அமைந்திருக்கிறார்கள். ஆசிரியர்களுக்கு அனுதாபமும், மாணவர்களுடைய மனத்தின் நிலையை அறியும் சக்தியும் அமையவேண்டுவது அவசியமாயிருக்கிறது. குழந்தைகளைப் பயிற்சி செய்யும் ஆசிரியர்களுக்கு அக் குழந்தைகளைப்போன்ற உணர்ச்சி இருத்தல்வேண்டும்.

(மா. செ.)

## அறிவீர்களா?

"தாருல் இஸ்லா"த்துக்குச் சேர்க்கப்படும் ஒவ்வொரு சந்தாநேயரும் ஒரு ஞானமடைந்த முஸ்லிமாகிறார். இதனால் இஸ்லாத்தின் கொடியைத்தாங்க இன்னுமொரு போர்வீரர் முன்வருகிறார். ஆதலின் உங்கள் நண்பர்களையும் உறவினர்களையும் இதை வாங்கிப்படிக்கும்படி செய்வீர்களாக.



# தமிழ் நாட்டில் இஸ்லாமிய பிரசாரம்

இப்பூவுலகிற் றோன்றியுள்ள தேசங்கள், மதங்கள், சமூகங்கள், சபைகள் முதலிய லௌகிக வைதிக ஸ்தாபனங்களெல்லாம் மேலான உன்னத நிலைமையையடைந்து விளங்குவது எக்காரணம் பற்றியென அதனதன் சரித்திரங்களை எடுத்தாராய்ந்தால் ஓயாது மேன்மேலும் செய்துவந்த பிரசாரங்களினால்தான் அவைகள் மகோன்னத நிலைக்கு வந்தனவென்று நாம் வெள்ளிடை மலைபோலறிகின்றோம். அப்பிரசாரம் இரண்டுவகைப்படும்: ஒன்று வாய்ப் பிரசாரம்; மற்றொன்று எழுத்துப் பிரசாரம். இவ் விருவகைப்பிரசாரங்களுள் எப் பிரசாரம் நாடிய பலனைக் கூடிய சீக்கிரம் எதிர்பார்த்த அளவுக்கு அளிக்குமென்பதைக் காலதேச வர்த்தமானத்தைப் பார்த்தே முடிவு கட்டவேண்டும். காலதேச வர்த்தமானத்தைக் கவனியாமல் சில நூற்றாண்டுகளுக்கு முன்னர் ஒருவர் செய்த பிரசாரத்தைப் பின்பற்றி இக்காலத்திலும் செய்யமுற்பட்டால் அது வீண்பிரயத்தனமேயொழியக் கோரிய காரியத்தை முடிக்க வல்லதன்று. ஆதலால் எத்தகைய பிரசாரம்செய்ய விரும்பினாலும் காலத்தின்போக்கையும், தேசத்தின் தன்மையையும், ஜனங்களின் மனப்பான்மையையும்—அறிவு விருத்தியையுங் கவனித்தே பிரசாரத்தை நடத்தவேண்டும்.

மேற்கூறியுள்ள எழுத்துப் பிரசாரம் வாய்ப்பிரசாரமாகிய இருவகைப் பிரசாரங்களுள் எந்தப்பிரசாரஞ் செய்வதால் நம் நாட்டில் கோரிய காரியத்தில் சித்திபெறலாமெனச் சிந்தித்தால் வாய்ப் பிரசாரத்தினாற்றானென நாட்டின் தற்கால ஸ்திதியிலிருந்து முடிவுகட்டவேண்டியிருக்கின்றது. ஆனால் தற்காலம் நம் நாட்டில் எழுத்துப்பிரசாரம் பத்திரிகைகளின் மூலமாகவும் வாய்ப் பிரசாரம் பிரசங்கங்களின் மூலமாகவும் நடைபெற்றுவருகின்றன. நம் நாட்டில் தற்காலம் கற்றவர் மிகக் குறுகிய தொகையினரா யிருப்பதால் பத்திரிகைகளின் மூலம் செய்யப்படும் எழுத்துப் பிரசாரம் அக்குறுகிய தொகையினர்க்கே பயன்படுமாதலால் பெருந்தொகையினராயுள்ள பாமரஜனங்களுக்குப் பிரயோஜனமற்றதாய்ப்போகின்றது. மேலும், குறுகிய தொகையினராயுள்ள கற்றவர்களுள்ளும் எத்தனையோ பெயர்கள் நாட்டிற்கோ, மதத்திற்கோ, சமூகத்திற்கோ நன்மை பயக்கும் விஷயங்களில் பத்திரிகைகளின்மூலம் செய்யப்படும் எழுத்துப் பிரசாரங்களை என்னவென்றாவது அணுவளவுங் கவனியாது தம்மட்டும் உண்டுடுத்திப் பன்னலங்கருதாத தன்னலப்புலிகளாயிருக்கின்றனர். ஆதலின் நம் நாட்டில் தற்காலம் எழுத்துப் பிரசாரத்தினால் எதிர்பார்க்கும் அளவு ஜனங்கள் தயாராக நீண்டகாலம் பிடிக்குமே யொழிய, கூடிய விரைவில் தயாராகி விடுவார்களென்று எண்ணுவது வீண் மனோராஜ்யந்தான்.

இவ்வாறு நம் நாட்டில் தற்காலம் பத்திரிகைகளின் மூலம் பிரசாரம் செய்துவருவது பெரும்பாலும் மேனாட்டாரைப் பின்பற்றித் தானெனக் கூறவேண்டும். மேனாட்டார் தத்தம் தேசத்தினரின் நன்மையைக் கருதி ஆரம்பக் கல்வியைக் கட்டாயப் படிப்பாகச் சட்டமாக்கி ஒவ்வொருவருங் கற்றவராயிருப்பதுமன்றி இரவலர்முதல் புரவலர்வரை பத்திரிகை வாசிப்பதில் அத்தியந்தப் பிரியர்களா யிருக்கின்றனர். இவ்விதம் ஒவ்வொருவரும் பத்திரிகைப் பிரியர்களாயிருப்பது எக்காரணத்தினாலென சிறிது யோசித்துப் பார்த்தால் ஆரம்பத்தில் செய்துவந்த வாய்ப் பிரசாரங்களினாற்றானென நாம் தெளிவாயறியக்கிடக்கின்றது. எங்ஙனமெனின், இங்கிலாந்துபோன்ற மேல் நாடுகளில் பார்லிமெண்டு சபை ஸ்தாபிதம்செய்ய அந்நாட்டார் துரிதமாய் வேலைசெய்ய வாரம்பித்தகாலத்தில் இருந்து அதாவது 1213-ம் ஆண்டிலிருந்து இன்றுவரை அச்சபைக்கு அபேட்சகராய் நிற்பவர்கள் நகரங்கள் முதல் கிராமங்கள் வரையிலும் தத்தமக்கு வாக்குச் சேகரிப்பதற்காக ராஜீய தேசீய விஷயங்களைப்பற்றிப் பிரசாரம் செய்து, வாக்காளர்கள் தேர்தலின் முடிவைத்தெரிந்துகொள்ளும் பொருட்டுப் பத்திரிகைகள் படிக்க முற்பட்டுப் பத்திரிகைச்சுவை தட்டியதும் தொடர்ச்சியாய்ப்பத்திரிகை வாசிப்பதில் எல்லோரும் அத்தியந்தப்பிரியர்களாய் விட்டனர். அதனாலன்றோ அங்குள்ளோர் எழுத்துப்பிரசாரத்தினால் எளிதில் காரியசித்தியடைகின்றனர். ஆதலால் நம் நாட்டின் தற்கால நிலைமையைக் கவனிப்பின் வாய்ப்பிரசாரமே நாடிய லட்சியத்தைக் கூடிய விரைவிலளிக்குமென்பது திட்டமாயறியக்கிடக்கின்றது.

ஆனால் தற்காலம் வாய்ப்பிரசாரம் எவ்வண்ணம் நடைபெறுகிறதெனக் கவனித்துவிட்டு யாம் எடுத்த விஷயத்தைப் பற்றி வரைவாம். நகரங்களிற் பிரசுரமாகும் பத்திரிகைகளில் இத்தனை மணிக்கு இன்னவிடத்தில் ஒரு பிரசங்கம் நடக்குமெனப் பிரசுரஞ்செய்து விடுகின்றனர். அதைக் கண்ணுற்ற ஒரு குறிப்பிட்ட வகுப்பார்—பத்திரிகை படிக்கும் வகுப்பார்—அவர்களிலும் "கற்றிலனாயினுங் கேட்க வஃதொருவற், கொற்கத்தி னூற்றாந்துணை," என்னும் நீதியை யுணர்ந்தாரன்றோ அக்கூட்டத்திற்குச் சென்று பிரசங்கத்தைக் கேட்டுத் திரும்புகின்றனர். இவ்வாறு ஒரு குறுகிய வகுப்பார்களுக்குள் மட்டும் மிகுந்த சாதுர்யத்தோடு பிரசங்கம் செய்துவிடுவதால் எவ்வளவு பலன் கிடைத்துவிடுமென்பதுதான் விளங்கவில்லை. நகரங்களிலும், கிராமங்களிலும் எத்தனையோ பெயர்கள் தற்காலம் நடந்துவரும் சுதந்தரவியக்க மின்னதென்றும், எதற்காகவென்றும், மதங்களின் உண்மைகள் இன்னவைகளென்றும், சமூக வாழ்க்கை யின்னதென்றும் அறியாது சதாகாலம் சுயநலங்கருதி ஒற்றுமைக்கேடான விஷயங்களில் தலையிட்டுச் சமத்துவம், சகிப்புத்தன்மை, பரோபகாரம் முதலிய சுகுணங்கள் வாய்க்கப் பெறாதவர்களாயும் பெரும் பாமரத் தன்மையுடையோராயு மிருக்கின்றனர். உண்மையான தேச ஊழியமோ, மத ஊழியமோ, அன்றிச் சமூக ஊழியமோ செய்கின்றவர்கள் இத்தகைய பாமரஜனங்களிடையே பிரசாரஞ் செய்தாலன்றோ கைமேற் பலன் கிடைக்கும்! ஆதலால் தற்காலம் நம் நாட்டுப் பாமரஜனங்களைத் திருத்தினாலொழிய நாம் விரும்பும் லட்சியத்தை விரைவிலடைவது சிறிது கஷ்டந்தான்.

இவைகளெல்லாம் ஒருபுறமிருக்க, தற்காலம் தமிழ் நாட்டில் இஸ்லாமிய பிரசாரம்—இஷா அத்தே இஸ்லாம்—எந்நிலைமையி லிருக்கின்றதெனச் சிறிது ஆராய்ந்தால், அந்தோ! பரிதாபம்!! முயற்கொம்புதான் எத்தனையோ பெரிய பட்டங்களுடன் ஆலிம்கள், மௌல்விகள், ஹாபில்கள் என விளங்கும் இஸ்லாமார்க்க ஞான பண்டிதர்கள் தமிழ் நாட்டில் இஷா அத்தே இஸ்லாத்துக்காக எவ்வளவு சுயநலத் தியாகம்பண்ணியிருக்கின்றார்

களென்பதைத் தெரிந்துகொள்ள யாம் பெரிதும் ஆவல்கொண்டுள்ளேம். ஆயினும் நந்தமிழ் நாட்டில் ஒருவித இஸ்லாமிய பிரசாரம் நடந்துதான் வருகின்றது; அப்பிரசாரம் எத்தகையதெனச் சிறிது கவனிக்கின் நமக்கே பெரும் வெட்கக்கேட்டைத் தருகின்றது. சில ஆலிம்கள் வழக்கமாக—வாடிக்கையாக வருஷத்தில் ஒருமுறை அல்லது இருமுறை இஸ்லாமிய பிரசாரம் செய்கிறோமென வெளிக்குக் கூறிக்கொண்டு உள்ளத்தில் பொருள்தேடும் ஆவல்கொண்டு தமிழ்நாடெங்கும் சுற்றுப்பிரயாணம் செய்து வருகின்றார்கள். அந்தோ! அவர்கள் செய்யும் பிரசாரம் காலதேச வர்த்தமானத்தையொரு அணுவளவும் அனுசரியாததும், இயற்கைக்கு முரணானதுமாக இருக்கின்றதேயொழியப் பிறிதொன்றுமில்லை. அவர்களின் பிரசங்கங்களிலிருந்து கேட்போர் ஒன்றும் புதிதாகத் தெரிந்துகொள்ளவும் முடியாது. ஏதோ ஒரு காலத்தில் ஒருவர் எழுதிவைத்த கதைகளையும், ஹாஸ்ய வசனங்களையும்கூறித் தமது பிரசங்கத்தை முடித்து விடுகின்றார். இத்தகைய பிரசாரத்தினால் யாது நன்மை விளைந்து விடுமோ? அறிகிலேம்.

பண்டுதொட்டின்றுகாறும்நந்தமிழ் நாட்டில் இப்படிப்பட்ட இஸ்லாமிய பிரசாரர்களிருப்பதனாலன்றோ தமிழ்நாட்டு முஸ்லிம்கள் இஸ்லாத்தின் சுத்தசத்திய சம்பூரண தத்துவங்களை இன்றுவரை நன்கறிந்திலர். அன்றியும், மேற்கூறிய வாடிக்கைப் பிரசாரர்கள் பிறமதஸ்தர்களிடம் முஸ்லிம்களுக்குத் துவேஷமேற்படும்படியும் சில விஷயங்களைத் தங்கள் போதனையில் புகுத்தி விடுகின்றார்கள். உதாரணமாக, ஒரு சமயம் ஓர் ஆலிம் 'எங்கேயாவது காபிர்களிருப்பின் ஒவ்வொரு முஸ்லிமும் வாளெடுத்துச்சென்று அன்னவர்களை முஸ்லிம்களாக்கவேண்டும்,' எனக்கூறினார். இதிலிருந்து அன்னவரின் இஸ்லாமிய ஞானம் எத்தகையதென இதை வாசிப்பவர்களே மிக எளிதிலறிந்து கொள்ளலாம். இத்தகைய இஸ்லாமிய ஞானப்புலிகள் செய்யும் பிரசாரத்தினால் யாதுமறியாத முஸ்லிம்கள் இன்னும் மிகக் கேவலஸ்திதிக்கே வாநேரிடும். ஆதலால் அன்னவரின் பிரசங்கங்களைக் கேட்பதைக் காட்டினும் சும்மா இருந்து விடுவதே மிக நலமாயிருக்கும். மேற்கூறிய ஆலிம் சாகிபவர்கள், "மத விஷயத்தில் பலவந்தமில்லை; (ஏனெனின்) மெய்யாகவே சரியான மார்க்கமானது தப்பானதினின்றும் விளக்கமாக வேறாக்கப்பட்டிருக்கிறது"–(:குர். 2:256?) என்ற ஆண்டவனின் கட்டளையைத் தெரிந்து கொள்ளாது ஆலிம் என்னும் பட்டத்தை வகித்திருப்பதுதான் நமக்குப் பெரும் வியப்பைத் தருகின்றது.

இஃதன்றியும், எந்தப் பாஷையிலும் ஜுமுஆப் பிரசங்கம் புரியலாமென்றுஎத்துணையோ தடவைகளில் எவ்வளவோ ஆதாரங்களுடன் நம் 'தாருல்இஸ்லாம்' விளக்கிக் காட்டியும், நம் தமிழ்நாட்டிலுள்ள மார்க்கத் தலைவர்களெனவிளங்குபவர்களிற் பெரும்பான்மையோர் 'தாம் பிடித்த முயலுக்குக் கால் மூன்று' என்றபடி 'அரபிப்பாஷை தவிர மற்றப் பாஷைகளில் கூடாது' என்று விதண்டாவாதம் புரிகின்றார்கள். எத்துணையோ வருடங்களுக்கு முன்னர் ஓர் அறிஞர் அரபி பாஷையில் எழுதிவைத்த ஜுமுஆப் பிரசங்கங்களை அரபிபாஷையே தெரியாத ஜனங்களுக்குத் திரும்பத் திரும்ப வாசித்துக்காண்பித்தால் என்ன பயன் விளையும்? இன்னும் சிலர் ஜுமுஆப் பிரசங்கத்தைத் தமிழில் செய்ய விரும்பினால் அந்த - எவ்வளவோ ஆண்டுகளுக்கு முன்னர் அரபி பாஷையில் எழுதிவைத்த பிரசங்கங்களையேதமிழில்மொழிபெயர்த்துச் செய்யலாம் எனக் கூறுகின்றனர். இது எவ்வளவுதூரம் அறிஞர்களுடைய புத்திக்குப் பொருந்துமென்பதுதான் சந்தேகம். காலதேச வர்த்தமானத்தை யனுசரியாத பிரசாரத்தினால் ஜனங்களை எவ்வாறு திருத்தமுடியும்?



உலகம் நடையிலும், உடையிலும், பாவனையிலும், அறிவிலும் ஒவ்வொருநாளும் ஒவ்வொருபடி முன்னேறிக்கொண்டே போகின்றமையால் காலதேச வர்த்தமானத்தை யனுசரித்தே எத்தொழிலுஞ் செய்தல் வேண்டும். அதுதான் கைமேற் பலன் கொடுக்கும். ஆதலால் முஸ்லிம் மார்க்க ஞான பண்டிதர்களே! விழிமின்! இஸ்லாத்தின் உண்மையான தத்துவங்கள் இன்னதென அறியாது வாழும் முஸ்லிம்களிடையே, போலி ஆலிம்கள், மௌல்விகள் செய்யும் போலிப் பிரசாரங்களைப்போக்கி, சமத்துவமும், தாராளமும், சகோதரத்துவமும் நிறைந்த இஸ்லாத்தின் சுத்தசத்திய தத்துவங்களை வாய்ப் பிரசாரம் செய்ய முன்வாருங்கள். இதுதான் நந் தமிழ் நாட்டு முஸ்லிம்களை முன்னேற்றத்தின் முன்னணியிற் கொண்டுவந்து நிறுத்தும்!

எம். கே. ஏ. முகம்மது இபுராஹீம்,
சோழகுடி.

## தமிழ் நாட்டிலும் ஹிந்து முஸ்லிம் வேற்றுமையா?

"இஸ்லாத்தில் நன்னம்பிக்கை வைத்திருப்பதன் அடையாளம் பக்ஷம் பாராட்டுவதாகும். எவரிடத்தில் பக்ஷமில்லையோ அவரிடத்தில் ஈமானுமிராது" (நாயகவாக்கியம்)

மதசம்பந்தமாகவோ மற்றும் வேறெந்த விஷய சம்பந்தமாகவோ பலவந்தமென்பதையே இன்னதென் றறியாத சாந்தியை அளிக்கவல்ல இஸ்லாமார்க்கம் நாகரிக மிக்கு விளங்கும் இக்காலத்திலும், புறமதத்தார்களால் கொடுமையான மதமென்று நினைக்கப்பட்டு வருவதற்குக் காரணம்; பெரும்பான்மையான முஸ்லிம்கள் திருமறையாகிய :குர்ஆன் வேதத்தையும், ரஸூல் நாயகம் (ஸ'ல்அ'ம்) அவர்களின் 'ஹதீ'த்ஷரீபையும் தங்கள் சொந்தப் பகுத்தறிவினால் ஆராய்ந்து பாராமல் பிறர் தப்புந் தவறுமாகச் சொல்வதையே நம்பி அதையே அனுஷ்டித்துப் புறமதத்தார்களுடன் எவ்வாறு நடந்துகொள்ள வேண்டுமென்பதை அறியாமல் பிடிவாதமுள்ளவர்களாயிருப்பதுதான்.

முஸ்லிம்களுள் அனேகர், கா'பிர்களென்று அழைக்கப்படும் புறமதத்தாரும் தங்களுடன் சமமாகத் தங்களுடைய சுயமத அபிப்பிராயத்தைக் கொண்டிருக்க விரும்புவதில்லை. ஏனெனின், தங்கள் மார்க்கமே சிறந்ததென்றும், அம்மார்க்கத்தைப் பலரும் தழுவும்படி பலவந்தம் செய்து அதனால் தங்களுக்கு மரணம் நேரிட்டாலும் சுவர்க்கமே கிட்டுமென்றும் தவறாகக் கருதுகிறார்கள். ஆனால் உண்மையை உசாவுங்கால் முஸ்லிம்கள் இஸ்லாமார்க்கம்தான் சிறந்த மார்க்கமென்று நிரூபித்துக் காட்டும்படியான இஷாஅத்தே இஸ்லாம்மட்டும் அவர்கள் செய்யக் கட்டளையிடப்பட்டிருக்கிறார்களேயன்றி அதற்காகப் பிறரைப் பலவந்தம் செய்ய அவர்களுக்கு அதிகாரம் கிடையாது: "ஆதலின் (அவர்களுக்கு ஆண்டவனுடைய உதாரத்துவத்தை)எடுத்து ஞாபகமூட்டும்; ஏனெனின், நீர் ஒரு ஞாபகமூட்டுகிறவராகவே யிருக்கின்றீர். அவர்கள்மீது நீர் ஒரு காவற்காரரல்லீர்"

(:குர், 88: 21, 22) என்றும், "மதவிஷயத்தில் பலவந்தமில்லை; (ஏனெனின்)மெய்யாகவே சரியானமார்க்கமானதுதப்பானதினின்றும் விளக்கமாக வேருக்கப்பட்டிருக்கிறது" (:குர். 2: 256) என்றும் இஸ்லாமிய வேதங் கூறுகின்றது. எனவே அவர்கள் இஸ்லாமிய பிரசாரம் செய்வதில் எவருக்கும் எவ்விதமான ஆக்ஷேபமுமிருக்க நியாயமில்லை. "இந்தக் கிரந்தமாகிறது. இதில் சந்தேகமில்லை. (தீமையினின்றும்) அஞ்சிக்கொள்ளுகிறவர்களுக்கு ஒரு வழிகாட்டியா யிருக்கிறது," என்று ஆண்டவன் அவ்வேதத்தில் கூறுகின்றான். இதுபோன்ற சத்தியமும் ஆண்மையும் நிறைந்த வாக்கியங்களை எடுத்துக்காட்டி உண்மையை வெளிப்படுத்தவேண்டும். அவ்வாறு சொல்லியும் ஒருவர் அதைக் கேளாவிடின் "உங்களுடைய மார்க்கத்தின் பிரதிபலனை நீங்கள் அடைவீர்கள் : மேலும் என்னுடைய மார்க்கத்தின் பிரதிபலனை நான் அடைவேன்," என்று சொல்லிவிடவேண்டுமேயொழியக் காரணமின்றிக் கோபிப்பது அறிஞர் செயலாகாது. "மனிதர்களைக் கீழே தள்ளுவதில் ஒன்றும் ஆண்மையாவது வலிமையாவது இல்லை; ஆனால் தன்னுடைய கோபத்தை யடக்கிக் கொள்ளுகிறவனே அதிக பலசாலியா யிருக்கிறான்," என்பதும் மு'ஹம்மது' நபி(ஸ்'ல்அ'ம்) அவர்களின் திருவாக்கியமாகும். ஆனால் அப்படிச் சாந்தமாகவும் சமாதானமாகவும் இஷாஅத்தே இஸ்லாம் செய்யும் போதும் சங்கடங்களும் இடையூறுகளும் நேருமாயின் தற்காப்பின் நிமித்தம் ஜிஹாத் செய்யவேண்டு மென்பதுதான் :குர்ஆனின் கட்டளையாகும். இஸ்லாமிய சரித்திரத்தில் காணப்படும் சண்டை சச்சரவுகளெல்லாம் தற்காப்பின் நிமித்தம் நடந்தவைகளாகவே யிருக்கின்றன.

மேற்கூறிய உண்மைகளால் நான் விளக்கவருவது யாதெனின் இஷாஅத்தே இஸ்லாம் செய்வதற்கும், இஸ்லாமார்க்கக் கொள்கைகளைப் பரிசுத்தமாகப் பின்பற்றுவதற்கும், இப்போது நமது பாரத நாட்டின் விமோசனத்துக்கு அத்தியாவசியமான ஹிந்து முஸ்லிம் ஒற்றுமை எவ்விதத்திலும் குறுக்கே விழுவதில்லை என்பதேயாகும். ஒற்றுமையினாலும் பிரியமான வசனங்களினாலும் மட்டும் பிறருடைய மனத்தையும் கொள்ளைகொள்ள முடியுமேயொழிய, பலாத்காரத்தினாலன்று. ஆனால் ஒற்றுமை ஏற்படவேண்டுமாயின் இரு சமூகத்தாருள்ளும் பிடிவாத மின்மையும், சகிப்புத்தன்மையும், பரஸ்பரம் விட்டுக் கொடுக்கும் தாராள நோக்கமும் நிலவுதல் வேண்டும். இந்தியாவின் புனருத்தாரணத்துக்கென்றே தோன்றியுள்ள மகாத்மா காந்தியடிகளும், அலி சகோதரர்களும் போன்ற பல மேதாவிகள் தோன்றி ஹிந்து முஸ்லிம் ஒற்றுமைக்காகப் பாடுபடும் இந்நாளிலும் வட இந்தியாவில் குல்பர்கா, நாகபுரி கோஹத்போன்ற பல விடங்களில் ஹிந்து முஸ்லிம் கலகங்கள் நடந்தவண்ணமாகவே யிருக்கின்றன வென்பதும், பண்டித மதிலால் நேரு. மௌலானா அபுல்கலாம் ஆஸாத் முதலிய பெரியோர்களின் முயற்சியால் ஒருவாறு ஒற்றுமைவளர்ந்துவருகிற தென்பதும் இத்தமிழ் நாட்டில் பலரும் அறிந்த விஷயமே. ஆங்கு அவ்வாறிருக்க ஹிந்து முஸ்லிம் கலகமென்பதே இன்னதென்றறியாத இத்தமிழ்நாட்டிலும் அதைக்கிளப்பி விடுவதற்கான முயற்சிகள் செய்யப்பட்டு வருவதாகச் சென்ற ஜனவரி மாதம் 18-ந்தேதி வெளியான "தமிழ்நாடு" பத்திரிகையின் தலையங்கத்தில் ஆசிரியரவர்கள் "சில மௌல்விகளும் சில உயர்ஜாதி இந்துக்களும் இந்தப் பாவத்தில் கைவைத்திருக்கின்றார்கள்," என்று எழுதியிருப்பதைப் படிக்கத் தென்னிந்தியாவிலும் எத்தனை கோயில்களும் எத்தனை மஸ்ஜித்களும்



இடிக்கப்படுமோ வென்றும், எத்தனை உயிர்கள் கொலைசெய்யப்படுமோ வென்றும் நினைக்க இப்போது உடல் நடுங்குகின்றது. இச் சந்தர்ப்பத்தில் :குர்ஆன், ஸூரா'ஹஜ், 40-வது ஆயத்தை முஸ்லிம்களுக்கு ஞாபக மூட்டுவது நலமாகும். அதனில் அவர்கள் புறமதஸ்தர்களின் கோயில்களையும், தொழுந்தலங்களையும் காக்கக் கடமைப்பட்டிருக்கிறார்கள்.

வட இந்தியாவிலோ ஹிந்துக்கள் முஸ்லிம்கள் ஆகிய இருவர்க்கத்தினருக்கும் அவரவர் மத அபிப்பிராயங்களைத் தெரிவிக்கவேண்டிய பல பத்திரிகைகள் பொதுவாக ஆங்கிலத்திலும் சிறப்பாக அவரவர் தாய்பாஷையிலும் நிலவுகின்றன. அவ்வாறிருந்தும் அங்கேயே அடிக்கடி காணப்படும் சமூகக் கலகங்களை அடக்குவது எவ்வளவோ கஷ்டமாகிவிடுகின்றது. இத் தமிழ் நாட்டிலோ பாமர ஜனங்களைத் தவறான வழியினின்றும் திருத்துவதற்கு வேண்டிய பத்திரிகைகள் பல தாய்பாஷையில் கிடையா. இது ஒரு பெருங் குறையேயாகும். "தமிழ்நாடு" பத்திரிகையில் காணப்பட்டதேபோல் ஹிந்து முஸ்லிம் கலகத்துக்குப் பல அத்தாக்ஷிகள் தினசரி பத்திரிகையில் சில நாட்களாகக் காணப்படுகின்றனவாதலின் வெள்ளம் வருவதற்கு முன் அணை போடுவதே தமிழ்நாட்டாரின் விவேகத்தனமாகும். எனவே இரு சமூகத்திலுமுள்ள அறிஞர்கள் புலர்வெளிக்கிளம்பிச் சுற்றுப் பிரயாணத்தாலும், பல பத்திரிகைகள் தோன்றச் செய்வதாலும் அவ் வேற்றுமையை முளையிலேயே களைந்தெறியவேண்டும். இத்தமிழ்நாட்டில் "சுதேசமித்திரன்" இப்போது புதியதாய்த் தோன்றிய "சுயராஜ்யா" இவை தவிர இந் நாட்டின் தாய் பாஷையாகிய தமிழில் வேறெதுவும் தினசரியாக வெளிவரவில்லை. அப் பத்திரிகைகளிலும் முஸ்லிம்கள் சம்பந்தமான எவ்விஷயமும் நன்கு ஆராய்ந்து எழுதப்பட்டு வருவதில்லை. அப் பத்திரிகைகளுக்குடையார் தாராள நோக்கமுடையவர்களே யெனினும் இஸ்லாத்தை யறிந்த முஸ்லிம் ஒருவரும் அக் காரியாலயங்களில் இல்லாததனால் பல தவறுகள் நேரிடுகின்றன. எனவே அப் பத்திரிகைகள் முஸ்லிம்கள் சார்பாகப் பிரசாரம் செய்யமுடியாத நிலைமையிலிருக்கின்றனவென்பது நன்குபுலப்படும். ஹிந்துக்கள் சார்பாகப் பரந்த நோக்கமுடைய பல பத்திரிகைகள் தினசரியாகவும், வாரப்பதிப்பாகவும், மாதாந்த சஞ்சிகைகளாகவும் வெளிவருகின்றனவென்பதற்கு, "சுதேசமித்திரன்," "சுயராஜ்யா" "நவசக்தி," "தமிழ்நாடு," "லோகோபகாரி" "சுகோதயம்" "பஞ்சாமிர்தம்," "பாலபாரதி" முதலியன சான்றாகும். இப் பத்திரிகைகள் ஹிந்துக்களுள் ஏதேனும் தவறுதல் காணப்படின் உடனே விட்டுக்கொடுக்கும் நோக்கத்துடன் ஜனங்களைத் திருத்தும் சக்திவாய்ந்தனவா யிருக்கின்றன. ஆனால் முஸ்லிம்கள் சார்பாக மிகக் குறைவான 4, 5 பத்திரிகைகளே நடைபெறுகின்றன. தினசரிபத்திரிகை ஒன்றும் இல்லாமலிருப்பது பெரும் ஆபத்துக் கிடமானதாகும். அதிலும் தாராளக் கொள்கையையுடைய "தாருல் இஸ்லாம்" ஒன்று தவிர மற்றப் பத்திரிகைகள் பரஸ்பரம்விட்டுக் கொடுத்தலென்னும்பாடத்தையே யறியாத மனிதர்களால் நடத்தப்படுகின்றன. இச் சந்தர்ப்பத்தில் இன்னும் இத் தமிழ்நாட்டில் திருக் :குர்ஆன் வேதத்தைக் கா'பிரான பாஷையாகிய தாய் பாஷையாம் தமிழில் மொழிபெயர்க்கக் கூடாதென்று பிடிவாதஞ் செய்யும் மௌல்விமார் பலர் இருக்கின்றனரென்பதை ஞாபகமூட்ட விரும்புகிறேன். நான் முஸ்லிம்களால் நடத்தப்படும் தமிழ்ப் பத்திரிகைகளையும் அடிக்கடி வாசிப்பதுண்டு. அவற்றுள் "தாஜுல் இஸ்லாம்" என்னும் பத்திரிகை ஆசிரியர் அதன் சென்ற அக்டோபர் மாத சஞ்சி

கையில் 11 கேள்விகளுக்கு விடை யென்பதில் எல்லாக் கேள்விகளுக்கும் அது அதற்கேற்ற பதிலை ஒருவாறு அளித்துவிட்டு 4-வது கேள்வியாகிய “இந்து, கிரிஸ்து, யூத, புத்த மதங்கள்போன்ற மதங்களில் ரப்’பி’ன் உண்மையானது காணப்படவில்லையா?” என்பதற்கு மட்டும் இஸ்லாமார்க்கமல்லாத புற சமயங்களுக்கும் சம உரிமை அளிக்க மனமில்லாமல் “இவ்வினா தெளிவாக விளங்கப்படவில்லையாதலால் விடையளிக்கமுடியவில்லை,” என்று மழுப்பிவிட்டிருக்கிறார். என்ன ஆச்சரியம்! ஆண்டவனுடைய அனுக்கிரஹத்துக்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட சில ஜாதியாரே உரியவரென்று கூறிக்கொள்ளும் யூதர்களுடையதும் கிரிஸ்தவர்களுடையதுமான ஒரு தவறான கொள்கையைக் கண்டிக்கவேண்டியே :குர் ஆன், 2:62-ல் “நிச்சயமாக நன்னம்பிக்கை கொண்டவர்களும்: எஹூதிகளாய்ப் போனவர்களும், ஸேபியர்களும்-(இவர்களுள் யாராயிருப்பினும்) எவரொருவர் அல்லா(ஹ்)வின் மீதும், இறுதிநாளின் மீதும் நன்னம்பிக்கைவைத்து, மேலும் நன்மையானகாரியங்களைச் செய்தனரோ அவருக்காக அவருடைய பிரதிப் பிரயோஜனம் அவரது ரப்’பி’னிடத்திலிருக்கிறது; மேலும், இவர்களுக்கு (யாதொருவிதமான) அச்சமுமில்லை, மேலும் அவர்கள் துயருறவுமாட்டார்கள்” என்றும், இன்னும் “அச்சமூட்டி எச்சரிக்கை செய்பவர் அவதரிக்காத ஜாதியார் ஒருவருமில்லை” (35:24) என்றும் :குர்ஆன் ஷரீ‘பில் ஆண்டவனே கூறியிருப்பதுடன் ஒரு சமயம் ஒருவர் நபிகள் நாயகத்தைப் பார்த்து, “ஆண்டவனுக்கு இணையாக வேறு தெய்வங்களைப் பண்ணிக்கொண்டவனுடைய கதியானது என்னவாகும்”? என்று வினவியபோது, “அவனையும் ஆண்டவன் மன்னிக்கிறானென்று அறிந்துகொள்வீராக; ஆனால் தௌபா’ என்னும் பச்சாதாபத்தின்மேல் மன்னிக்கிறான்,” என்று விடைபகர்ந்தார்கள். உண்மை இவ்வாறிருக்க அதை மறைக்க முயல்வதன் கருத்தென்னே? “ஸைபுல் இஸ்லாம்” பத்திரிகையோ நாகபுரியில் மௌலானா அபுல்கலாம் ஆஜாத் அவர்கள் ஹிந்து முஸ்லிம்கள் ஒற்றுமையை ஓங்கச் செய்வதற்காக ஹிந்துக்களை மஸ்ஜிதின் பக்கம் வாத்தியகோஷம் செய்யக்கூடாதென்று வற்புறுத்தக் :குர்ஆனில் ஆதாரமில்லையென்று கூறினதாகத் தமிழ் பத்திரிகைகளில் வெளி வந்ததைக் காண மனஞ் சகியாமல் உடனே அவ்வாறு கூறியிருக்க முடியாதென்றும், அப்படிக் கூறினால் முஸ்லிம்களுக்குள் பிரிவினைகள் உண்டாய்விடுமென்றும் கூவிற்று. அந்தோ! தேச முன்னேற்றத்துக்காக உண்மையை வெளிப்படுத்துவதும் குற்றமாகுமா? பின்னர் மௌலானா ஆஜாத் அவர்கள் தாம் அவ்வாறு கூறவில்லையென்றும் வேறு விதமாகக் கூறியதாகவும் சொல்லியிருந்தாலும் அதே கருத்தைத்தான் அவர் வெளியிட்டிருத்தல் வேண்டும். ஏனெனின், :குர்ஆனிலும் அதே கருத்தமைந்த வாக்கியங்கள் காணப்படுவதாகக் கூறும் மதாவேசமுள்ள மௌல்விகளே பின்னர் மஸ்ஜித்களுக்கருகில் கூச்சலிடக்கூடாதென்றுமட்டும் காணப்படுவதாக ஒத்துக்கொண்டிருக்கிறார்கள். எனவே தொழுகையின்போது மஸ்ஜிதில் முஸ்லிம்கள் பலர் ஒன்றாய்ச் சேர்வதால் ஏதோ வியவகாரத்தைப் பேச ஆரம்பித்து ஒருவரோடொருவர் சண்டையிடாமலிருக்கும்பொருட்டு அன்னாருக்கே அத்திருவசனங்கள் பொருந்துமேயன்றிப் புறமதஸ்தர்கள் அதிலும் முக்கியமாக ஹிந்துக்கள் அதனருகில் தங்களுடைய தேவ பூஜையைமுன்னிட்டு வாத்தியகோஷம் செய்யக்கூடாது என்பதற்கு ஆதாரமென்ன இருக்கிறது? [இவ்விஷயத்தில் யாம் இவ்வியாசதாரின் அபிப்பிராயத்தினின்றும் வேறுபடுகிறோம். ப - ர்.]





இதைச்சாந்தமாகவும் சமாதானமாகவும் ஹிந்துமுஸ்லிம் ஒற்றுமைக்கேற்றவாறு எழுதாமல் அப்படிப்பட்ட உயரிய கருத்துக்களுக்கே திருமறையில் இடமில்லையென்று கூறுவது நியாயமாகாது. இவ்வாறே மற்றும் சில பத்திரிகைகளும் உண்மையை மறைத்தாவது விட்டுக்கொடாமலிருக்க விரும்புகின்றன. எனவே மேற்கூறியவாறான பத்திரிகைகளால் நம் தமிழ்நாட்டில் சகோதரத்துவமும் ஒற்றுமையும் நிலவுமென்று நம்புவதற்கில்லை. மற்றை இஸ்லாமதப் பத்திரிகைகளைப் போல் ஒரு குறிப்பிட்ட கக்ஷியைப் பிரசாரஞ் செய்யாமலும் பல பிரிவினைகளை உண்டாக்காமலும் பொதுவாகச் சுத்த சத்திய சன்மார்க்கமாகிய இஸ்லாமார்க்கத்தின் மேன்மையைப் பகுத்தறிவுக்கேற்றவாறும் நடு நிலைமையாகவும் முற்போக்குடன் பிரசாரஞ்செய்துவரும் “தாருல் இஸ்லாம்” பத்திரிகை ஒன்றுதான் உண்மையான ஹிந்துமுஸ்லிம் ஒற்றுமையை நம் தமிழ்நாட்டில் நிலைநிறுத்தவல்ல ஆற்றலைப்படைத்ததாயிருக்கிறதென்பதை எந்த அறிஞரும் மறுக்கத்துணியார் என்பது துணிபு. ஆதலின் இச்சிறந்த சமூக ஊழியப்பத்திரிகை வாரப்பதிப்பாகவோ அல்லது கூடுமானால் தினசரியாகவோ இத்தமிழ் நாட்டில் நிலவும்படி செய்யவேண்டுவது பொதுவாக ஹிந்துமுஸ்லிம் ஒற்றுமையை விரும்பும் இருசமூகத் தேசாபிமானிகளின் கடமையாகவும் சிறப்பாகத்தமிழ்நாட்டுக்காங்கிரஸ் கிலாபத் கமிட்டிகளின் கடமையாகவுமிருக்கிறதென்பதை வற்புறுத்த விரும்புகிறேன்.

இதனால் மேற்கூறிய “தாருல் இஸ்லா”த்தின் காரியஸ்தர்கள் இஸ்லாமார்க்கத்தைப் புரட்டிவிடுகிறார்களென்று கருதிவிடவேண்டாம். அவர்கள் தங்கள் மார்க்கத்துக்காகச் செய்துள்ள தியாகம் அளவிடற்கரியது. அவர்கள் தங்கள் மார்க்க உபதேசங்களைத் தமிழ் நாட்டினர் தெளிவாக அறியும் பொருட்டுச் செய்துவரும் பிரசாரம் போற்றற்குரியது. இத்துணை இஸ்லாமார்க்க மேற்கோள்களை வரையும் ஆற்றல் எனக்குண்டாகும்படியாகச் செய்தவை, இஸ்லாத்தை உள்ளது உள்ளபடியே உண்மையைச் சற்றும் ஒளிக்காமல் பிரசுரிக்கப்படும் மேற்படி ஆசிரியரின் பத்திரிகையும் மற்றும் பற்பல அம்மார்க்க சம்பந்தமான பிரசுரங்களுமே யாகும்.

முஸ்லிம் சகோதரர்களே! மேற்கூறிய இவ்வுரைகளால் உங்களிடம்மட்டும் குற்றங்களிருப்பதாகவும் அதற்கேற்ற ஆதாரங்களைக் காட்டியதாகவும் எண்ணிவிடவேண்டாம். ஹிந்துக்கள் பலர் இஸ்லாத்தின் உண்மைகளை அறியாமல் அம்மதத்தைப்பற்றித் தவறான எண்ணங்களைக்கொண்டு பிடிவாதமாக நடந்துகொள்கிறார்கள். எனவே ஹிந்துக்களுக்கு இஸ்லாத்தின் உண்மைகளையும் மேன்மைகளையும் அறிவிக்கவேண்டியது உங்கள் கடமையாகும். ஆதலின் “தாருல் இஸ்லாம்” போன்ற தாராளக்கொள்கையுடன் உண்மையைப் பரப்பும் பத்திரிகைகளை ஆதரித்து வரவேண்டியது உங்கள் பொறுப்பாகும். எனினும் ஹிந்துசகோதரர்களும் தங்கள் மார்க்கத்தில் கூறப்பட்டிருக்கும் உண்மைகளையும் உய்த்துணராமல் பிடிவாதமாக இருப்பது அவர்களின் மடமையேயாகும். அன்னாருக்கு “நல்லோர்களெங்கே பிறந்தாலுமென்” என்னும் ஈற்றடியைக் கொண்டுள்ள செய்யுளையும்,

“ஆவுரித்துத் தின்றுழலும் புலையரேனும்
கங்கைவார் சடைக்கரந்தார்க்கன்பராகில்
அவர்கண்டீர் நாம் வணங்கும் கடவுளாரே”

என்னும் அப்பர் மொழியையும், "என்னை எந்தெந்தவிதமாக வணங்குகிறார்களோ, நான் அந்தந்த விதமாகத் தோன்றி முத்தி தருவேன்" என்னும் பகவத்கீதை வாக்கியத்தையும் "வேறுபடுஞ் சமயமெலாம் புகுந்து பார்க்கின், விளங்குபரப் பொருளே நின்விளையாட்டல்லால் மாறுபடுங் கருத்தில்லை," என்னும் சமரச ஞானியாகிய தாயுமானார் வாக்கையும் ஞாபக மூட்டவிரும்புகிறேன். அரபு பாஷையில் அல்லா(ஹ்) என்று வழங்கப்படும் அந்த ஏகபராபரனே கிருஷ்ணன் என்று ஒவ்வொரு ஹிந்துவும் உணரல்வேண்டும். இருசமூகத்தாரும் தங்களுடைய நடவடிக்கைகளைத் திருத்திக் கொள்ளத் திருக் :குர்ஆனிலுள்ள அடியில்வரும் வாக்கியத்தை முன் மாதிரியாகக் கொள்வது நலம்: "மேலும் ஒவ்வொருவனுக்கும் அவன் முன்னோக்குகின்ற ஒரு திசையுண்டு; ஆதலின் நற்கருமங்களை முற்படுத்துங்கள்; நீங்கள் எங்கே யிருந்த போதிலும் அல்லா(ஹ்) உங்களெல்லோரையும் ஒன்று சேர்த்துக்கொண்டு வருவான்; நிச்சயமாகவே அல்லா(ஹ்) எல்லா வஸ்துக்களின் மீதும் ஆண்மை பெற்றவனா யிருக்கிறான்" (2: 148).

R. சீனிவாஸாசாரியார்,
சத்தியவிஜய நகரம்.

# பெண் கல்வி

உலகத்தில் கடவுளால் படைக்கப்பட்ட எத்தனையோ ஜீவராசிகள் இருக்கின்றன. அவற்றுள் மனிதவர்க்கமும் ஓர் படைப்பில் சேர்ந்ததுதான். ஆயினும் எல்லா ஜீவராசிகளைக் காட்டினும் மனிதர் பகுத்தறிவுடன் கூடியவர்களா யிருத்தலின் அவர்களே மேலானவர்களா யிருக்கிறார்கள். மற்றை எல்லா ஜீவராசிகளையும் அடக்கியாளக்கூடிய சக்தி மனிதவர்க்கம் ஒன்றுக்குத்தான் உண்டு. இத்தகைய மானிடவர்க்கத்தில் ஆண் பெண் என்ற இருவித பாகுபாடுக ளேற்பட்டிருக்கின்றன. இவ் விரு பால்களுமே சிறந்தவையெனினும் இவற்றுள் ஆண்பால் உயர்வென்றும் பெண்பால் தாழ்வென்றும் பெரும்பான்மையோரால் கருதப்படுகின்றன. என்னே! உலகப்போக்கு. ஆணுக்கும் பெண்ணுக்கு மிடையில் பகுத்தறிவு என்பது வேறுபடவில்லை. அவ்வாறிருக்க இந்நாட்டவர் மேற்குறித்த அபிப்பிராயத்தால் பெண்களுக்குச் சிறுபிராயத்திலிருந்தே சரியான கல்வியைப்புகட்டாமல் அவர்களைப் பயங்கொள்ளிகளாகவும், மூடிகளாகவும் போய்விடும்படி செய்துவிடுகிறார்கள். ஆண் மக்களுக்குப் போதிப்பதுபோலவே பெண்மக்களுக்கும் கல்வியைப் பயிற்றுவித்து வந்தால் ஆண்பாலார் சோர்வடையுங் காலத்தில் பெண்மணிகள் அவர்களுக்கு வேண்டிய ஊக்கத்தை யளிப்பார்கள் என்பது என் தாழ்மையான அபிப்பிராயம். சில புத்திமான்கள் இத்தகைய அபிப்பிராயத்தைக்கொண்டே இக்காலத்தில் பெண் கல்வியை விருத்திசெய்து வருகின்றார்கள். எனினும், அவ் விருத்தி இன்னும் அதிகப்படவில்லை. சில வகுப்புக்களில் பெண் கல்வி குறைவாகவே இருக்கின்றது. அனேக ஜாதிப்பெண்களின் கூட்டங்களில் நான் பெரும்பாலும் பழகியிருக்கிறேன். நூதனமாகத்தான் முஸ்லிம் ஸ்திரீ ரத்னங்களுடன் பழகும்படியான சந்தர்ப்பம் வாய்த்திருக்கிறது. என் அனுபவத்தில் மற்ற ஜாதிப் பெண்களைக் காட்டினும் முஸ்லிம் பெண்மக்களுக்குக் கல்வி குறைவென்றே சொல்லவேண்டி யிருக்கிறது. முஸ்லிம் மாதர்களுக்கும் தக்ககல்வியைப்பயிற்றுவித்தால் அவர்களும்மற்ற ஜாதியாரைக் காட்டினும் நுட்பமாகவும் இலேசாகவும் கற்றுக்கொள்ளக்கூடியவர்களாயிருக்கிறார்கள். இந்த சக்தி அவர்களுக் கிருக்கிற தென்பது என் அனுபவத்தில் கண்ட உண்மை. என் முஸ்லிம் சகோதரிகளைச் சிறையில் அடைத்துவைத்திருப்பதேபோல் வைத்திருப்பதற்கு நான் வருந்தவில்லை. ஏனெனின், எவ்விதமான கஷ்டங்களையும் பொறுமையுடன் சகித்துக்கொள்ளும் தன்மை பெண்பாலாராகிய எங்களுக்கு ஆண்டவனால் அருளப்பட்டிருக்கிறது. நான் அவர்களைக் கல்வியில்லாமல் வைத்திருப்பதற்காகவே வருந்துகிறேன்.

நான் இஸ்லாத்தைச் சரிவர அறியாதவளா யிருப்பினும் நான் பார்த்தவரையிலும், கேள்விப்பட்டவரையிலும் இஸ்லாம் சிறந்த லக்ஷியத்தைக்கொண்ட ஓர் உயரிய மதமாகவே இருக்கிறது. ஆனால் முஸ்லிம் ஆண் பெண்களின் அனுஷ்டானத்தைக் கவனித்தால், அவர்களிற் பெரும்பான்மையோர் அத்தகைய உயரிய இஸ்லாமிய மார்க்கச் சட்டப்படி நடக்கவில்லையென்பது விளங்குகிறது. அன்னாரை அதற்குக் காரணங்கேட்டால் தங்களால் அவ்வாறு நடந்துகொள்ள அவகாசப்படுவதில்லை யென்றும், அங்ஙனம் நடத்தல் உலக வழக்கமென்றும் பலவாறு காரணங் கூறிவிடுகின்றனர். அவர்கள் அத்தகைய மனப்போக்குடையவர்களா யிருப்பதனால் மார்க்கத்துக்கு விரோதமான சில கொள்கைகளைப் பாரம்பரை வழக்கமென அனுஷ்டித்துக்கொண்டும், தங்கள் உண்மைக் கொள்கைகளை உள்ளவாறெடுத் துரைப்போரைப் பழித்துக் கொண்டும், பெண்கல்வி கூடாதென மொழிந்து அவர்களைக் குகைக்குள்ளடக்கித் தாழ்த்திக் கொண்டும் திரிகின்றனர். அவர்கள் மார்க்கத்தைப் பின்பற்ற அவகாசமில்லாதவர்களா யிருக்கும்போது ஏன் அவர்களும், "நாங்கள் முஸல்மான்களே" என்று சொல்லிக் கொள்ளவேண்டும்? இப்பொழுது இருக்கக்கூடிய நிலைமையில் :குர்ஆன், நாயகவாக்கியம், இமாம்களின் சட்ட திட்டங்கள் ஆகிய இவைகளின்படி அனுஷ்டானத்தில் நடந்து காட்டும் ஒரு பகுதியாரை முஸ்லிம்களென வாழ்த்தி அவ்வாறு நடக்க முடியாதவர்களை வேறு ஒரு மதத்தைப் பின்பற்றுவோர்களென்றோ, அல்லது சட்டப்படி நடவாத முஸ்லிம்களென்றோ பெயரிட்டழைப்பது நலமாயிருக்குமென நான் கருதுகிறேன்.

முஸ்லிம் சகோதர சகோதரிகள் நான் இவ்வாறு கூறுவதற்காக என்மீது துவேஷங் கொள்ளாமல் பொறுமையுடன் தங்களிற் சிலரிடமுள்ள குறைகளை எண்ணி, என்னை மன்னிப்பார்களென்றே நான் நம்புகிறேன். நான் உள்ள உண்மை நிலையை விளக்கிக் கூறுகிறேனேயன்றி இல்லாத தொன்றைக் கற்பனைசெய்து பொறாமையினால் கூறிவிடவில்லை. முஸ்லிம்கள் சுமார் 1000 வருஷங்களுக்குமுன் சட்ட திட்டங்களைப் பகுத்தறிவால் உணர்ந்து அனுஷ்டித்தபடியே இப்பொழுதும் அனுஷ்டித்து ஏக சகோதரத்துவத்துடன் நேர்வழியில் நடந்துகொள்வார்களானால் :குர்ஆனில் கூறியிருக்கிறபடி, இம்மையில் உயர்பதவியை யடைவதுடன், மறுமையிலும் நலம்பெறுவார்கள். இஸ்லாமியப் பெண் கல்வியும் விருத்தி யடையும். உலக முழுதுமே இஸ்லாமிய சகோதரத்துவத்தில் மூழ்கி யிருக்கும்.

ஆதலின், முஸ்லிம் தலைவர்கள் மேற்கூறிய இஸ்லாமானவர்களை நேர்வழியில் செலுத்தத்தக்கவாறு இஸ்லாத்தின் உண்மைகளை உள்ளபடியே உபதேசம் செய்வவல்ல பிரசாரகர்களை ஏற்படுத்தி ஆங்காங்கே போதிக்கச்செய்து, பெண்களுக்கும் மார்க்கக் கல்வி, சமயஞானம், தேசீய உணர்ச்சி ஆகிய இவைகளைக் கற்பித்து முஸ்லிம் ஆண் பெண்கள் எல்லோரையும் முன்னேற்ற முறச்செய்வார்களாக.

ஒரு வகுப்பார் உயர்நிலை யடையவேண்டுமாயின் அவ்வகுப்பின் ஆண்மக்களைப்போலவே பெண்மக்களும் கல்விமுதலியவற்றில் சிறந்தவர்களா யிருக்கவேண்டும் அங்ஙனமிருப்பின், அப்பெண்மணிகளே தங்கள் மக்களுக்கு நல்ல ஒழுங்கான போதனைகளைச்செய்து அவர்களைச் சீர்திருத்தி விடுவார்கள். எல்லாவகையிலும் ஆண்மக்களுக்குத் துணைபுரிவார்கள்; இஸ்லாமியர்களுடைய இல்லறம் செவ்விதில் நடைபெறும். ஆதலின், பெண்களைக் கூண்டிலடைப்பதை நீக்க இஷ்டப்படாவிடினும், கல்வியிலேனும் விருத்தியடையச்செய்து, தங்கள் மார்க்கத்தை உயர்வு படுத்தி, புறமதத்தினரும் "இஸ்லாம்மதம் சீரியமார்க்கம்" எனக்கருதும்படி செய்யவேண்டியது ஒவ்வொரு உண்மை முஸ்லிம்களுக்கும் உரிய கடமையாகும்.

இங்ஙனம்:
M. கமலாம்பாள்.

# கடமையைக் கடைப்பிடியுங்கள்

அன்பார்ந்த முஸ்லிம் வாலிபர்களே!

நாம் எம்முடைய சென்ற வியாஸத்தில், இஸ்லாம் வெற்றியுடன் விளங்கிய அக்காலத்தில் முஸ்லிம்வாலிபர்கள் எவ்வாறிருந்தார்களென்னும் விஷயத்தை எடுத்துரைத்தோம். அதில் எவ்வாறு ரா'பீயும் ஸமாரும் தங்கள் மனத்துள் தூண்டப்பட்டதோர் தூண்டுதலினால் தங்களுடைய மத நம்பிக்கைக்கு ஊழியம் புரிவதற்காக ஓடினார்களென்பதை நீங்கள் அறிந்தீர்கள். நாம் உரைத்தவாறே அஃது அவர்களுடைய கடமை, தேசாபிமானம், பெருமை முதலியவற்றின் அழைப்பாயிருந்தது. எவ்விதமான சைன்னிய சேவைச் சட்டமும் அவர்களைச் சேனைமுகத்துக்கு இழுத்துச் செல்லவில்லை. இஸ்லாத்தில் எந்தவிதமான பலவந்தமென்பதும் அறவே கிடையாது. இஸ்லாம் தன்னுடைய குமாரர்களுள் ஒவ்வொருவரிடமிருந்தும் அவரவருடைய கடமையைச் செய்யவேண்டுமென்பதையே எதிர்பார்க்கிறது; இதற்காகத்தான் அவ்விருவாலிபர்களும் தங்களுடைய கடமையைச் செய்ய முற்பட்டார்கள். அவர்கள் அவ்வாறு முற்படுவதற்கு முன்னர் அவர்களுக்கு எவ்விதமான ஊக்கமும் ஊட்டவேண்டியவர்களாக இருந்ததில்லை; பிறருடைய உற்சாக மூட்டுதலென்னும் தூண்டுதல் அவர்களுக்கு அவசியமில்லாம லிருந்தது. அவர்கள் அவ்வாறு சேனையில் சேர்ந்துகொண்டது தங்களுக்கே மனமாரத்தோன்றிய ஒரு சேனைச் சேவைப்பிரியமாகும். இஸ்லாத்துக்குப் பெருமை சூட்டுவது அவர்களுடைய விருப்பமாயிருந்தது. அப்படிப்பட்ட பிரியத்தை அவர்கள் அலக்ஷியம் செய்துவிடலாமா? இஸ்லாத்தின் தற்காப்பினிமித்தம் போர்புரிவதென்பது அவர்களுக்குக் கௌரவமாக விருந்தது; அப்படிப்பட்ட கௌரவத்தினின்றும் விலகியிருக்க அவர்கள் விரும்பவில்லை; இஸ்லாத்திற்காகப் பிராணத்தியாகம் செய்வது அவர்களுக்குப் புண்ணியமான தொழிலாகவே தோன்றிற்று. ஆதலின் அப் புண்ணியத்தைச் சம்பாதிக்க அவர்கள் முயற்சித்தார்கள்.



ஆனால் முன்னே நாம் எழுதியவாறு, அந்த வீரர்களின் கவசமானது இப்பொழுது உங்கள்மீது வீழ்ந்திருக்கிறது. இற்றை நாளில் நீங்கள்தாம் இஸ்லாத்தின் வீரர்கள். இவ்வாழ்க்கை யென்னும் நாடகத்தில் நீங்கள் இன்று இஸ்லாத்துக்கென்றே ஒருமேடை வகுத்துக்கொண்டிருக்கிறீர்கள். அம் மேடையின்மீது வீரர்களாக அமர்ந்து வீரத்தைக் காட்டுவதும் அல்லது பயங்கொள்ளிகளேபோல் பயந்து மூலையில் ஒதுங்குவதும் உங்களிடத்தில்தான் இருக்கிறது. ஆண்டவனுடைய திருவாக்கியமும் இவ்வாறு கூறுகின்றது: "இது சென்றுபோன ஒரு கூட்டமாயிருக்கிறது; அவர்கள் சம்பாதித்தது அவர்களுக்காயிருக்கும்; மேலும் நீங்கள் சம்பாதிப்பது உங்களுக்காயிருக்கும்; மேலும் அவர்கள் செய்திருந்ததன் பொருட்டு நீங்கள் கேள்வி கேட்கப்படமாட்டீகள்." (குர், 2·141). ஆனால் காலமானது பிரம்மாண்டமானசுமைகளாகிய வழக்கம், ஆசாரம், குருட்டுத்தனமான ஐதிகம், பிற்போக்கானநம்பிக்கைமுதலியவைகளால் அசையாமற் றடுக்கப்பட்டிருப்பதனால் வாலிபர்கள் அவ்வாறான இலௌகிக அழுக்கினின்றும் உயரத்தில் பறப்பதற்கு வேண்டிய சிறகுகளாகிய வெளிச்சத்தை அடைந்திருக்கிறார்கள். வாலிபர்கள் ஒன்றிற்காக உயிர்வாழ்வதோ அல்லது இறப்பதோ என்னும் முடிவுக்கு வரவேண்டிய பகுத்தறிவை உடைத்தாயிருக்கிறார்கள்.

கிரீஸ்தேசத்து ஞானியொருவர், தாழ்ந்த நிலைமைக்கு வந்துவிட்ட தம்முடைய தேசத்தாரை முன்னேற்றுவதற்காகச் செய்த முயற்சியில் தன்னுடன் வேலை செய்வதற்குப் பொறுப்புள்ளவர்கள் பிற்காலத்தில் தேசமக்களாக வாழப்போகும் வாலிபர்களே என்று கருதினார். அந்த ஞானியாகிய ஸொகராத் (ஸாக்ரட்டீஸ்) என்பவரைப் பின்பற்றிய தேசபக்தர்கள் யாரெனின், அத்தேசத்து வாலிபர்களேயென்பதை நீங்களும் அறிந்திருப்பீர்கள். அந்தக்கிரீஸ்தேசத்து ஜனங்கள் யாவரும் தாழ்ந்ததும் அருவருக்கத்தக்கதுமான நடத்தைகளாகிய சேற்றில் விழுந்து புரண்டு கொண்டிருந்தார்கள்; ஆனால் ஸொகராத் மட்டும் மானிடத்தன்மையை நிலைநிறுத்துவதற்கு எங்கே சந்தர்ப்பம் அகப்படுமென்று ஆவலுடன் எதிர்பார்த்துக்கொண்டிருந்தார்; தாம் செய்யப்போகும் உயரிய பிரசங்கங்களைக் கேட்பதற்கு வாலிபர்தள் மட்டுமே யோக்கியதை யுடையவர்களெனக் கருதினார். அவருடைய அப்படிப்பட்ட நம்பிக்கை தவறானதாக இருக்கவில்லை; கிரேக்க வாலிபர்களிடம் தாம் பிரசங்கஞ் செய்ததற்குத் தகுந்த பதில் அவ்வாலிபர்களால் அளிக்கப்பட்டது. வாலிபர்களைக் கெடுப்பதாக அவர்மீது குற்றஞ்சாட்டப்பட்டு அரசாங்க உத்தரவின் பிரகாரம் ஒரு கிண்ணம் விஷத்தைச் சந்தோஷத்துடன் உட்கொண்டு உண்மைக்காகச் சுயதேசப் பிராணத்தியாகியின் மரணத்தை யடைந்தார். ஆனால் இனி வர்ப்போகும் வாலிபர்களுக்கு ஓர் மரண ஸாஸனப்பொருளாகத் தம் மரணத்தை அமைத்தார்.

எந்தத் தேசத்து ஜனங்களின் கிளர்ச்சிகளும், அவைகளுக்குப் பக்கபலமாக அத்தேசத்து வாலிபர்கள் தியாகஞ்செய்யத் துணிவார்களாயின், அடங்கவே அடங்கா. இத்தாலிய தேசத்து வாலிபர்கள்

தாம் அத்தேசத்துத் தேசாபிமானியாகிய கிரபால்டியின் கொடியைத்தாங்கி அத்தேசத்தில் வெற்றிபெற்றார்கள். துருக்கியில் ஏதேச்சாதிகாரமென்னும் தளையினின்றும் அத்துருக்கியரைச் சுதந்தரவாதிகளாகச்செய்தவர் "முன்னேற்றஒற்றுமைச் சங்கம்" என்னும் வாலிபர் சபையின் முக்கிய வீரர்கள் என்வர் என்பவரும், கமால் என்பவருமாகிய இரண்டு வாலிபர்களே. எகிப்து, பாரசீகம், ஆப்கானிஸ்தானம் முதலிய தேசங்களின் விஷயத்திலும் இவ்வாறுதான் நடந்தது. எங்கும் இனி வரப்போகும் குடிமக்களாகிய வாலிபர்கள்தாம் முன்னேற வேண்டிய நடைக்குத்தலைவர்களா யிருக்கிறார்கள். மேலும் தாய்நாடாகிய இங்கும் சங்காதன் இயக்கமென்பதென்ன? ஹிந்து மத வாலிபர்கள் தங்கள் தாய்நாட்டின் முன்னேற்றத்துக்காகக் கிளப்பிவிட்ட ஓர் இயக்கமேயன்றி வேறொன்றுமில்லை; அஃது ஒரு வாலிப ஹிந்துக்கள் சங்கம். தபசியைப் போன்ற மகாத்மாகாந்தி யடிகளும் இந்தியாவின் வாலிபர்களையே எதிர்பார்க்க வேண்டியவரா யிருக்கிறார். அவருடைய திருமுகமானது யாதொரு தளையினால் கட்டப்படாததும் அமுக்குப்படியாததுமான மனத்தையுடைய வாலிபர்களுத்தான் அதிகமாகப் போகிறது. அவரும் மிக்கபொருத்தமாகவே அப்பத்திரிகைக்கு "யௌவன இந்தியா" என்று பெயரிட்டிருக்கிறார்.

இந்தியாவிலுள்ள இஸ்லாமிய வாலிபர்களாகிய நீங்கள் என்ன சொல்லுகிறீர்கள்? நீங்கள் உங்களுடைய சமூகத்தின் பொன்னே போன்ற ஐதிகங்களைப் பின்பற்றவிரும்புகிறீர்களா? நீங்கள் வாயில்லாப் பிராணிகளாகியமிருகங்களைப்போல்விரட்டப்பட விரும்புகிறீர்களா? அல்லது யுத்தத்தில் ஜயம்பெற்ற பகுத்தறிவுள்ள வீரர்களைப்போல் இருக்க விரும்புகிறீர்களோ, இல்லையோ, இஸ்லாத்துக்கான பந்தயமானது உங்கள் மீதுதான் வீழ்ந்திருக்கிறது. ஆகையால் அந்தப் பந்தயத்தில் சேர்ந்து வெற்றிபெற மனமொழி மெய்களால் உண்மையாகப் பாடு படுங்கள். இப்பொழுது காலம் நெடுந்தூரத்தில் விலகிவிடவில்லை.

## குடும்பமில்லாமல் புறநாட்டு வாசஞ் செய்வதன் கஷ்டம்

நம் தென்னிந்திய ஜனங்களுள் அனேகர் வெளி ஜில்லா, வெளி மாகாணம், வெளி நாடுகளுக்குப்போய்ப்பற்பல விதங்களில் ஜீவனம் செய்ய வேண்டியவர்களாயிருக்கிறார்கள். ஆண் பாலாருக்கு 22-வயது முதல் 40-வயது வரையில் தான், வியாபாரம், கூலிவேலை, குமாஸ்தாவேலை முதலிய ஜீவனோபாயத் தொழில்களைச் செய்வதற்குவேண்டிய சரீர பலமும் மனோ வலிமையும் தெளிவான புத்தியும் இருக்கின்றன. அந்தப் பருவம் வரைதான் அவர்களுக்கு இல்லறவின்பம் முதலிய உலகபோக பாக்கியங்களில் விருப்பம் அதிகரிக்கும். அந்த 40-வயதுக்குமேல் அவ்விருப்பம் படிப்படியாய்க் குறைந்துகொண்டு போவது சகஜம். அப்படியே குறைந்து வந்து, வயோதிகத்தில் அப்படிப்பட்ட இச்சையானது ஒருவாறு அடங்கிவிடுகிறது. ஆதலின் இத்தகைய இச்சை வீறு கொண்டெழும் பருவத்தில், ஜீவனோபாயத் தொழில்களைச் செய்வதோடு மனைவிமக்களையும் உ



டனுறையச் செய்தல் அவசியமாகின்றது. அப்படியிருந்தும் நம்மவர் பெரும்பான்மையும் தொழில்களை யுத்தேசித்து அன்னிய நாடுசெல்லவேண்டி யிருப்பதால், தங்கள் மனைவிமக்களை அங்கே அழைத்துச்செல்லுதல் கஷ்டமா யிருக்குமென்று, அவர்களைச் சொந்த ஊரிலேயே விட்டுவிட்டு வெளித்தேசம் செல்கின்றனர்.

அவ்வாறு நம் ஜனங்கள் தொழில் அல்லது வியாபாரம் செய்வதற்கு வெளித் தேசங்களுக்குச் சென்றால் 1 வருஷம் முதல் 4, 5 வருஷங்கள் வரை அங்கேயே இருந்துவிடுகிறார்கள். சராசரி ஒவ்வொரு சபர் 2 அல்லது $2\frac{1}{2}$ வருஷமாகிறது. அதற்குப்பின் அவர்கள் நம் நாட்டுக்குவந்தாலும் சபரில் எத்தனை வருஷங்கள் இருந்தார்களோ அவ்வளவு காலம் இங்குத்தங்க முடிவதில்லை. வந்து சில மாதங்களுக்குள் பணக்கஷ்டம் ஏற்பட்டுவிடுகிறது. உடனேதிரவியந்தேடுவதற்காக மறுபடியும் அவர்கள் வெளி நாடுகளுக்குச் செல்ல வேண்டியதாய் நேரிடுகிறது. ஐயோபாவம்! 2, 3 வருஷங்களுக்குப் பின்னர் தம் மனைவி மக்களுடன் உல்லாசமாயிருக்க ஆவல்கொண்டு தாய்நாட்டையணுகும் ஏழைகள் சில மாதங்களுக்குள் மறுபடியும் வெளிநாடு திரும்ப ஏற்பட்டால் என்ன செய்வது! அப்போது அவர்கள் மனம் பிரயாணத்திற்குச் சம்மதிப்பதில்லை. அதனால் அவர்கள் சிலமாதங்கள் அதிகமாக இங்குத் தங்க விரும்புகிறார்கள். அப்போது செலவுக்குப் பணமின்மையால் கஷ்டம் அதிகரிக்கிறது. அதனால் அவர்கள் வெளிநாடுகளிலிருந்து பணத்தை வரவழைத்தோ, அல்லது தங்கள் மனைவிமக்களின் நகைகளை அடகுவைத்துப் பணம்வாங்கியோ செலவிட்டுச் சிலகாலங் கழிக்கிறார்கள். எனினும் அக்காலம் அவர்கட்கு, விசனத்துடன் மனைவிமக்களிடம் தக்க ஆர்வமின்றிக்கழிகின்றது. பின்னர் மறுபடியும் அயல்நாடுகளுக்கே செல்லவேண்டிய அவசியம் ஏற்படுகிறது. ஆகவே, அவர்கள்மீண்டும் பிரயாணஞ் செய்கிறார்கள். அவ்வாறு ஓடுவோர்களின் ஆயுட்காலத்தைக் கணக்கெடுத்துப் பார்த்தால் அவ்வாழ் நாட்களில் சராசரி ஐந்திலொரு பாகந்தான் அவர்கள் தங்களுடைய மனைவிமக்களுடன் கூடிவாழ்கின்ற காலமாயிருக்கிறதென்பதும், மற்றை நான்கு பாகம் தனியே அவர்களால் வெளிநாடுகளில் கழிக்கப்படுகின்றதென்பதும் விளங்குகின்றன. இங்ஙனம் ஆண்மக்கள் யாத்திரையாய்ப்போய் வெளிநாடுகளில் வருஷக்கணக்காகத் தங்கிவிடுவதனால் ஒவ்வொரு சமயங்களில் மனைவிமக்களை நினைத்துக்கொண்டுவீணாக வருந்த வேண்டியவர்களாகவு மிருக்கிறார்கள். அன்றியும் அவர்கள் வாலிபப்பருவத்தின் இயற்கையினால் ஸினா (விபசாரம்) முதலிய துர்வழக்கங்களிலும் இறங்கி விடுகிறார்கள்.

மார்வாடிகனவான்களும், பம்பாய் மாகாணத்திலுள்ள சேட் கனவான்களும் நம்மவரைப்போலவே முதன்முதலில் இவ்வித வழக்கத்தைக் கொண்டிருந்தார்கள். ஆயினும், இவ்வாறான கஷ்டங்களைச் சகிக்கமாட்டாமல் இப்பொழுது தங்கள் தங்களுடைய மனைவிமக்களைத் தாங்கள் தொழிலுக்குச் செல்லுமிடங்கட்கு அழைத்துக் கொண்டுபோய்ச் சௌக்கியமா யிருக்கிறார்கள். ஆகையால் நம்மவரும் ஏன் அவர்களைப்போல் அவ்வழக்கத்தைச் செய்து சுகவாழ்வு வாழக்கூடாது? இன்னுமொன்று: இத்தகைய பிரயாணங்களில்ஏற்படும்சிற்சில அசௌகரியங்களால் பற்பல வியாதிகளுந்தோன்றுகின்றன. அவ்வாறான வியாதிகளின் உபத்திரவத்தினால் அவர்கள், தங்கள் உற்றார் உறவினரையும் காணாது சென்றவிடங்களிலேயே மாணத்துக்கு இரை

யாகிறார்கள். ஐயோபரிதாபம்! இனி நமது ஸ்திரீகளின் நிலைமையைப் பற்றிக் கவனிப்போம்: ஆண்மக்களைப் போலவே பெண்மக்களும் தங்கள் மங்கைப் பருவத்தில் உலகபோகங்களை அனுபவிக்கக்கூடியவர்களே. அப்படியிருந்தும் புருஷர் இங்ஙனம் பிரிந்து போய்விடுவதால், அவற்றை யிழந்துபரிதவிக்கின்றனர். இவ்வாறு எத்தனை நாள்வரைதான் தங்கள் அனுபவ இச்சையை அடக்கிக்கொண்டிருப்பார்கள். அவர்கள் தங்கள் புருஷர்களுடன் உல்லாசமாகக் காலங்கழிக்கவிரும்பியே அவர்களை மணந்து கொண்டவர்களன்றோ? நாம் ஊரையும் உற்றாரையும் விட்டு ஜீவனத்துக்காகவென்றே வெளிநாடுகளுக்குச் சென்று 'திரைகடலோடியுந்திரவியந்தேடு'வதேன்? மனைவிமக்கள், உற்றார் பெற்றாருடன் சுகமாக வாழ்வதற்கன்றோ? அவ்வாறின்றி நல்லயௌவன பருவத்தில் எல்லாரையும் விட்டுத் தூரதேசங்களில் தனியே ஏக்கத்துடன் காலங்கழிப்பது பேதைமையன்றோ? இவ்விஷயத்தில் நம்மவர்கள் ஏன் தகுந்த ஆராய்ச்சி செய்யக்கூடாது? உண்மையில் நூதனமாக ஒருதொழில் செய்யவோ அல்லது உத்தியோகம் தேடவோ வெளிநாடுகளுக்குப் போகும் போதே நாம்எல்லோரையும்அழைத்துப்போவது சிரமமே. எனினும், அங்குச்சென்று எல்லாச் சௌகரியங்களும் ஏற்பட்டபின்னர் உடனே தாய்நாட்டிற்குத் திரும்பி வந்து எல்லோரையும் ஏன் அழைத்துப் போகக்கூடாது?

மனைவி மக்களையும் வியாபாரஸ்தலங்களுக்கு அழைத்துச் சென்றால் அவ்விடத்திலேயே தொழிலும், மனைவிமக்களும் ஏற்பட்டுவிடுவதால், பின்னர் தாய் நாட்டுக்குத் திரும்பவேண்டிய அவசியம் ஏற்படாமல், அதையேமறக்கஹேதுவுண்டாகும் என்று சிலர் இதைப்பற்றி வாதிக்கிறார்கள். அது சிறந்த அபிப்பிராயமன்று. பம்பாய் முஸல்மான் சேட்களும் மற்றையோரும் மனைவிமக்களை வியாபாரஸ்தலத்துக்கு அழைத்துக்கொண்டுபோவதனால் தங்கள் தாய் நாட்டை மறந்துவிடுகிறார்களா? அவர்களுக்குத் தாய் நாட்டிலுள்ள இனபந்துக்கள், சிநேகிதர்கள் ஆகிய இவர்களின் ஞாபகம் வாராமலிருக்குமா? இவ்வாறு குடும்பத்துடன் வியாபாரத்துக்கு வேற்றூர் சென்றோர், சபர் செய்திருக்கிற ஊர் உள்நாட்டிலேயேஇருக்குமானால் இரண்டு வருஷத்துக்கொருமுறையும், வெளிநாடானால் 4, 5 வருஷத்துக்கொருமுறையும் தாய்நாட்டிற்கு வரவேண்டிய அவசியம் நேரிடாமலிருப்பதில்லை. ஆனால் ஏதோ நூற்றுக்கு ஒருவன் அவனும் — காட்டுமிராண்டிக்குணமுள்ளவன்—சபரிலேயே இருந்துவிடுவான். இப்போதும் மனைவிமக்களையும் விட்டுச் சில அவிவேகிகள் சபரிலேயே இருந்துவிடுவதில்லையா? அல்லது அங்கே வேறு விவாகம் செய்துகொண்டு தம்தாய் நாட்டையே மறந்திருக்கவில்லையா? கெட்டுப்போக விரும்புகிறவர்களைச் சரிப்படுத்த எவரால் முடியும்? இவர்களைப்பற்றி நாம் கவனிக்க வேண்டிதில்லை. நாம் பொதுவாகக் கவனிக்கவேண்டியது மார்க்கம் என்ன சொல்லுகிற தென்பதேயாகும். மனைவிமக்களையும் கூட அழைத்துச் செல்வது மார்க்கத்தில் தடுக்கப்பட்ட காரியமா? இல்லை. ஆதலின் எது நல்லது எதுகெட்டது என்பதைப்பகுத்தறிவைக் கொண்டு ஆராய்ந்து பார்க்கவேண்டும்.

“ஒரு ஊரில் எல்லாரும் தங்கள் மனைவிமக்களுடன் சபர்போய்விட்டால் தாய் நாட்டில் யார்தான் இருக்கப்போகிறார்கள்? பின்னர் வேற்றூர் போனவர்கள் இனத்தாரைத் தேடிக்கொண்டு வருவதென்பது எங்கிருக்கிறது?” என்று இதைப்பற்றிச் சிலர் கேள்வி கேட்கின்றனர். இது பயனற்ற கேள்வியாகும். இவ்விதம் ஓர் ஊர் பூராவும் காலியாகி விடும்



படி எல்லோரும் போய்விடமாட்டார்கள். ஏதோ ஜீவனத்துக்கின்றி ஏழையாயிருப்பவர்கள் மட்டும் ஜீவனோபாயத்தின் பொருட்டு வெளி தேசங்களுக்குப் போவார்கள். சிலர் மிராசுதார்களாகவும், அல்லது மதபோதக ஆலிம்களாகவும், சிலர் உத்தியோகஸ்தர்களாகவும், சிலர் வியாபாரிகளாகவும் ஊரிலேயே சுகமாகக் காலங்கழித்துவருவார்கள். ஆகவே ஒருபோதும் ஒரு ஊர் முழுதும் காலியாகாது, இன்னும் வெளி நாடுகளுக்கு நாம் மனைவிமக்களுடன் சென்றால் நமது பிள்ளைகள் அவ்விடத்திலுள்ள புதியபிள்ளைகளுடன் சேர்ந்து கெட்டுப் போவார்களென்று சிலர் மற்றொரு அபிப்பிராயம் கூறுகின்றனர். இஃது ஆச்சரியம்! தென்னிந்தியாவிலுள்ள முஸ்லிம் பிள்ளைகள் தவிர மற்தேசங்களிலுள்ள பிள்ளைகள், தங்கள் குழந்தைகளைக் கெடுத்துவிடத்தக்க கெட்ட இயல்புடையவர்களென்று நினைப்பது தவறு. நல்லோரும் கெட்டவரும் எல்லாவிடங்களிலும கலந்தே இருக்கிறார்கள். “ஊர் என்று இருந்தால் பறைச்சேரி ஒன்று இருக்கும்” என்னும் பழமொழிப்படி எந்த ஊரிலும் நான்கு பேர் கெட்டவர்களும் நான்கு பேர் நல்லவர்களும் இருப்பார்கள். பிள்ளைகளிலும் சிலர் ஒழுங்காகப் பள்ளிக்கூடம் போய் வாசித்துக்கொண்டும், மற்றும் சிலர் துஷ்டத்தனமுள்ளவர்களாயும் இருப்பார்கள். நாம் இருக்கும் ஊர்களில் கெட்டபிள்ளைகள் இல்லையா? அவர்களோடு நம்பிள்ளைகள் சேர்ந்திருக்கவில்லையா? அப்படிச்சேர்வதனால் நம்பிள்ளைகள் எல்லோருமா கெட்டுவிடுகிறார்கள்? கெட்டவர்களின் பழக்கத்தால் துர்க்குணம் படிவது இயற்கையெனினும், புத்தியற்ற பிள்ளைகளே அக்கூட்டுறவால் கெடுவார்கள்; நற்புத்தியுள்ள பிள்ளைகள் நல்லொழுக்கத்தைக் கைவிட மாட்டார்கள். இத்தன்மையே தான் அன்னியநாட்டிலுமிருக்கும். ஆதலின் இந்த அபிப்பிராயமும் சிறந்ததன்று. ஒருசமயம் நமக்கு விரோதமான அன்னிய நாட்டுப் பழக்கங்கள் நம்பிள்ளைகளிடம் படியுமென்னும் சந்தேக மிருந்தால் நாம் போகிற ஊர்களில் நமது ஊரார் அல்லது நமது நாட்டார் ஒருபக்கம் ஒதுங்கிக் குடியிருந்தால் நமது தாய் நாட்டிலிருப்பதுபோலவே யாதொரு கஷ்டமுமில்லாமல் இருக்கலாம்.

மற்றுஞ் சிலர், மனைவிமக்களை அயல் நாடுகளுக் கழைத்துச் சென்றால், அடிக்கடி வியாதியுண்டாவதால் சங்கடமுண்டாகுமென்றும், அவர்கள் தங்களுக்கு வியாதி யணுகாமல் சௌகரியமா யிருக்கும் தாய் நாட்டிலிருப்பதே நல்லதாகுமென்றும் சொல்கின்றனர். இவ்வாறு வியாதியுண்டாகாம லிருப்பதற்கு அயல் நாட்டைவிடத் தாய்நாடு சௌகரியமானதென்பது பேதைமையான கொள்கையே. எங்கிருந்தாலும் நோயானது மனிதர்களை விடுவதில்லை. உள்ளூர்களில் இருக்கும்போது வியாதிவருவதில்லையா? வந்தே தீருகின்றது. அச்சமயங்களில் தக்க வைத்தியர்களிடத்தில் நாம் பரிகாரம் தேடிக்கொள்கிறோம். இஃதேபோல் அன்னிய நாட்டிலும் வியாதி வந்தால் அங்குள்ள டாக்டர்களைக்கொண்டு பரிகாரம் தேடிக்கொள்ளலாம். அன்னிய நாட்டில் நாம் குடும்பத்துடனில்லாமல் தனியாக விருக்கும்போது ஏதேனும் வியாதிகண்டால் என்ன செய்கிறோம்? வைத்தியர்மூலம் சௌக்கியப் படுத்திக் கொள்கிறோமல்லவா? அதுபோல் குடும்பத்துட னிருக்கும்போதும் ஏன் செய்துகொள்ளக் கூடாது? இதற்கெல்லாம் யோசிப்பவர்கள் தாங்களும் புறநாடு செல்லாமல் சொந்த ஊரிலேயே இருந்துவிடுவது நலம். (தொடரும்).



முஹம்மது இப்ராஹீம் மரைக்காயர்.

# நபிகள் பிரானின் சீர்திருத்தக் குறிகள்

"மேலும் எல்லா ஜாதியார்களுக்கும் ஒரு ரஹ்மத்தாகவே (தயாளமாகவே) அல்லாமல் உம்மை நாம் அனுப்பிவைக்கவில்லை"

(:குர்ஆன், 21: 107).

மானிட சமூகம் தோன்றிய நாள் தொட்டும் இப்பூமண்டலமானது பல்வேறு காலங்களில் பல்வேறிடங்களில் பற்பல நபிமார்களால் விஜயம் செய்யப்பட்டிருக்கிறது. அவர்களுள் இறுதியானவர் நமது மு'ஹம்மத் முஸ்'த'பா ரஸூல் ஸ'ல்லல்லாஹு அ'லைஹிவஸ'ல்லம் அவர்களே யாவர். அவர்களுடைய வியாபகத்தை விசேஷித்துக் காட்டும் சிற்சில முக்கியமான நிலைகளைச் சொல்லவிரும்புகிறோம்: அவற்றுள் முக்கியமானது அவர்களுடைய சமயப் பிரசாரத்தில் அவர்கள் அடைந்த ஆச்சரியகரமான பூர்ண வெற்றியேயாகும்; இஃது அவர்களுடைய நண்பர்களும் விரோதிகளும் ஆகிய எல்லோராலும் ஏக அபிப்பிராயத்துடன் ஒத்துக் கொள்ளப்பட்டிருக்கிறது. "உலகத்தில் தோன்றிய எல்லா மதத்தலைவர்களுள்ளும் மு'ஹம்மத் (ஸ'ல்) அவர்களே மிக்க வெற்றிபெற்றவராயிருந்தார்," என்று என்ஸைக்ளோபீடியா பதினொன்றும் பதிப்பில் காணப்படும் ஒரு சிறு வாக்கியமே எம்முடைய வரலாற்றுக்குச் சான்று பகரும். மு'ஹம்மத்' நபி (ஸ'ல்அ'ம்) அவர்கள் அவதரித்த காலத்து அராபியர்கள் மூழ்கியிருந்த அவ்வளவு அநாகரிகத்தில் வேறு எந்த மதத்தலைவரும் தம்முடைய பிரஜைகளைக் கண்டதேயில்லை; அவ்வராபியர்கள் மதக்கொள்கைகள், இராஜீய விஷயங்கள், சமூக வாழ்க்கை முதலியவைகளைச் சமமாகவே ஒன்றும் அறியாமலிருந்தார்கள். பெருமை பாராட்டிக் கொள்ளத் தக்க ஞானமாவது, சாஸ்திரமாவது அவர்களுக்குக் கிடையாது. அன்றியும் அவர்கள் உலகத்தில் இதர பாகத்திலுள்ள ஜனங்களுடன் எவ்வித சம்பந்தமுமின்றி இருந்து வந்தார்கள்; தேசிய ஒற்றுமையென்பதே இன்னதென அவர்கள் அறியமாட்டார்கள்; ஒவ்வொரு கூட்டத்தாரும் தம்மட்டில் ஒரு சுயேச்சையான ராஜ்யத்தை ஏற்படுத்திக் கொண்டு மற்றக் கூட்டத்தாருடன் சண்டை செய்து கொண்டிருந்தனர். யூத மதம் அவர்களுடைய முன்னேற்றத்துக்கும் சீர் திருத்தத்துக்கும் எவ்வளவோ பாடுபட்டும் அது விழலுக் கிறைத்த நீராகவே போய்விட்டது; இவ்வாறான முயற்சியிலேயே கிரிஸ்து மார்க்கமும் தோல்வியடைந்துவிட்டது. ஹனீபின் மதமோ தனக்கு முன்னுள்ள மதங்களைப் போலவே பெருந் தோல்வி யடைந்ததுடன் அராபியச் சமூகத்தில் அஃது இருந்த இடமே தெரியாமல் எவ்விதமான அத்தாட்சிகளையும் நிலை நிறுத்த முடியாமல் அடியோடு மறைந்துவிட்டது. அப்படிப்பட்ட வழி தவறிய பாமர ஜனங்களின் சந்ததியார்களை உய்விக்கவே நமது ரஸூல் நாயகமவர்கள் (ஸ'ல்) இவ்வுலகுக்கு அனுப்பப்பட்டார்கள். அவர்கள் தோன்றிச் சில வருஷங்களுக்குள் நீண்டகாலமாக அங்கேஇருந்தமதம்,ஒழுக்கம்,ஆசாரம் முதலியவற்றிலுள்ள குற்றங்குறைகளைக் களைந்தெறிந்து விட்டார்கள். திரட்டிச் சொல்லவேண்டுமானால், அரபுதேசத்தின் நிலையையே உருமாறச் செய்துவிட்டார்களென்னலாம். அங்கிருந்தமதவிஷயங்களின்பிற்போக்கானகொள்கைகளையும், வெறுக்கத்தக்க விக்கிரஹ வணக்கத்தையும் அடியோடொழித்து அவ்விடத்தில் மகா பரிசுத்தமான ஏக தெய்வக் கொள்கையை நிலைநாட்டினார்கள்; அப்பாலைவனத்தின் அவ்வாறான நாகரிகமற்ற மக்கள் உண்மைக்காகப் புதிய உற்சாக மூட்டப்பட்டார்கள்; அவ் வுற்சாகமானது, உலகத்தின் நான்கு மூலைகளுக்கும் சென்று ஆண்டவனுடைய தூதைப் பரப்பத்தக்க விதமாக அவர்களைச் செய்துவிட்டது. அவர்கள் உலக வாழ்க்கையைத் துறந்துவிடாமலே கடவுளை வணங்கும் விதத்தில் சிறந்த சன்னியாசிகளையும் மகரிஷிகளையுங் காட்டிலும் சிறந்தவர்களானார்கள். தங்களுடைய தினசரி வாழ்க்கையின் அவசரத்தில் உழன்றுகொண்டிருக்கும்போதும் தொழுகைக்காக அழைக்கப்படும் பாங்கு (கூப்பாடு) அவர்களுடைய காதில் விழுந்ததும், உடனே அவர்கள் தங்களுடையஇகலோகசம்பந்தமான காரியங்களையெல்லாம் விட்டு விட்டு அப்படியே ஆண்டவன் முன் மிகப் பணிவுடன் தங்கள் முழுத் தேகமும் பூமியிற் படும்படி விழுந்துவிடுவார்கள்; அவர்களுடைய இராக்காலங்கள் அனேகமாய் அல்லா(ஹ்)வின் வணக்கத்திலேயே கழிக்கப்பட்டன. இவ்வாறு அவர்கள் இவ்வுலகிலேயே இருந்துகொண்டும் இவ்வுல்கத்தினரல்லாதாராய்,தம்முடைய ஆசிரமத்தில் ஒரு தனிமையான முனிவரும் எப்பொழுதும் அனுபவித்திராத விதமாய், முழு மனத்துடன் அவர்கள் கடவுளுக்குச் செய்யவேண்டிய கிரியைகளைத் தவறாமல் செய்வார்கள்.

அவர்கள் அடைந்த வைதிக விஷய முன்னேற்றம் இவ்வாறு உயர்நிலையிலிருந்ததுமன்றி அவர்களுடைய இலௌகிக விஷயமும் சற்றும் தாழ்வுறாமலே இருந்தது. உலகத்தின் பிரக்கியாதிபெற்ற ஜயவீரர்களுள்ளும் அவர்கள் தங்களுக்குரிய உயரிய ஸ்தானத்தைப்பெற்றார்கள். பெரிய இராஜ்யங்களெல்லாம் அவர்கள் முன் பனிக்கட்டிபோல் உருகிவிட்டன; அவர்கள் அகண்ட ராஜ்யங்களையெல்லாம் அடக்கி யாண்டது மாத்திரமேயின்றி, அவ்விடங்களிலெல்லாம் பிற்பட்ட சந்ததியார்களின் அலக்ஷியத்துக்கும் இடங்கொடாமல் அவர்கள் ஆதிக்கியத்தைப் பன்னிரண்டு நூற்றாண்டுகள் வரை நிலைநிறுத்தும்படியான விதமாக ராஜதந்திரங்களையும் விருத்தி செய்தார்கள். சுருங்கச் சொல்லுமிடத்து, அவர்கள் மிக்க பக்தி நிரம்பிய ஏகதெய்வ வணக்கக்காரர்களாயிருந்ததுடன் ஜயம் பெற்ற இராஜ்யாதிகாரிகளாகவும் விளங்கினார்கள். இவ்விரு விதமான துறைகளில் அவர்கள் அடைந்த நிலையினால் இவ்வுலகத்தையே அப்பொழுதிருந்த அந்தகாரத்தினின்றும் நாகரிகத்துக்குக் கொண்டுவந்த பற்பல விதமான சாஸ்திரங்களையும் கண்டுபிடித்தார்கள். இவ்விஷயத்தில் அதிக ஆச்சரியமென்னவெனின், இக் காரியங்களெல்லாம்இருபது வருஷத்துக்குள் நடந்துவிட்டனவென்பதே. இவ்வாறு மு'ஹம்மத் நபி' (ஸல்) அவர்களின் உபதேசமானது மக்களுக்குப் பூர்ண அறிவையூட்டக் கூடியதும், ஒரு மனிதனுடைய மனோசக்தியை எல்லாவிதங்களிலும் முன்னேற்றக் கூடியதுமா யிருக்கிறது. அவர்களால் தீர்க்கமுடியாத, மனிதனுக்கு ஏற்படக்கூடிய எவ்வித வியாதியும்கிடையாது. தன்னை ஒரு சிறந்தவைத்தியனென்று கூறிக்கொள்ளாத ஒருவன் எப்படிப்பட்ட ஆபத்தான வியாதிகளையும் கணக்கற்ற முறைகளில் சொஸ்தப்படுத்துவதுபோல சீர்திருத்தம்செய்வதில்சிறந்தஒருவர் தம்மைத் தாம் சிறந்தவரென்று கூறிக்கொள்ளாத

போதிலும் அனேகவிதமான முன்னேற்றங்களை அமலுக்குக் கொண்டு வருகிறார்; இவ்வித முறைகளால்தாம் மு‘ஹம்மத்’ நபியவர்கள் சிறந்தவர்களாய் உயர்வாகக் கருதப்படுகிறார்கள்.

உலகத்தின்கண் தோன்றிய எல்லா மதசீர்திருத்தக் காரர்களுள்ளும் அவதார புருஷர்களுள்ளும் நமது ரஸூல் நாயகமவர்களே தலை சிறந்து விளங்கியதற்கு இரண்டாவது காரணம், அவர்களுடைய திருத்தூதில் காணப்பட்ட சர்வான்ம மோக்ஷவாதமேயாகும். ஒவ்வொரு தீர்க்கதரிசியும் அவருடைய தூதை ஒவ்வொரு குறிப்பிட்ட வர்க்கத்தினருக்கு மட்டும் ஏற்றதெனச் சொன்னார்; ஒவ்வொரு தீர்க்கதரிசியும் ஒவ்வொரு தேசத்தின் அல்லது ஒவ்வொரு வர்க்கத்தின் ஜனங்களுக்குமட்டுமே சீர்திருத்தங்களையும் முன்னேற்றங்களையும் கொண்டுவந்தார்; ஒவ்வொரு தீர்க்கதரிசியின் பிரசாரமும் ஆத்ம பரிசுத்தத்துக்காகவே யென்பது வாஸ்தவமேயாயினும் அப்பிரசாரங்கள் ஒரு குறிப்பிட்ட வரம்பையுடையதாக விருந்தன. ஆனால் மு‘ஹம்மத்’ நபி (ஸல்’அ’ம்) அவர்களின் பிரசாரமோ எல்லாத் தேசத்தாருக்கும் எல்லா வர்க்கத்தினருக்கும் பொதுவானதாகவும், அவர்களுடைய தயையோ மானிட சமூகத்துக்கே உரியதாயுமிருந்தன. “மேலும் எல்லா ஜாதியார்களுக்கும் ஒரு ர‘ஹ்மத்தாகவே (தயாளமாகவே) அல்லாமல் உம்மை நாம் அனுப்பிவைக்கவில்லை” “மானிட சமூகம் முழுமைக்குமேயல்லாமல் உம்மை நாம் அனுப்பிவைக்கவில்லை” (34:28); “மானிட சமூகத்திற்கு அச்சமூட்டி எச்சரிக்கை செய்பவராக அவர் இருக்கும்பொருட்டு” (25:1); “ஏ ஜனங்களே! நிச்சயமாகவே உங்களெல்லோருக்கும் ஆண்டவனிடத்திலிருந்து வந்த தூதனாயிருக்கிறேன்” (7:158) என்பன போன்ற பல திருக்:குர்ஆன் வாக்கியங்கள் மு‘ஹம்மத்’ நபி (ஸ’ல்) அவர்கள் மானிட சமூக முழுமையின் முன்னேற்றத்திற்காகவே அதிகாரம் கொடுத்து அனுப்பப்பட்டிருக்கிறார்களென்பதை வலியுறுத்துகின்றன. மறுபடியும் ரஸூல் நாயகமவர்களால் கொண்டுவரப்பட்ட அவ்வேதமானது தன்னைப்பற்றி, “எல்லா ஜாதியாருக்கும் ஞாபகமூட்டியாயிருக்கிறது” (12:104) என்று கூறுகிறது.

ஒருகாலத்தில் இம்மானிட சமூகமானது தண்ணீரால் சூழ்ந்து கொள்ளப்பட்ட பல பூபாகங்களாகப் பிரிக்கப்பட்டிருந்தது; அப்பொழுது ஒவ்வொரு ஜாதியும் தன்னுடைய குறிப்பிட்ட தேசத்தின் நான்கு எல்லைகளுள்ளும் இதர ஜாதியோடு எவ்வித சம்பந்தமுமின்றித் தனிமையாகக் கிடந்தது; அப்போது ஓரிடத்துக்கும் மற்றோரிடத்துக்குமுள்ள போக்குவரத்துச் சாதனங்கள் குறைந்திருந்தன. அப்படிப்பட்ட வாழ்க்கையின் நிலைமையில் மானஸீகப் பரவுதலை அதிகமாக எதிர் பார்ப்பது முடியாது. ஒவ்வொரு ஜாதியும் தனக்கணித்தாயுள்ள தன் இயல்பைமட்டும் அறிந்து கொள்வதுதான் தன்னுடைய நோக்கமாகக் கொண்டிருந்தது; ஆகையினால்தான் ஒவ்வொரு ஜாதியாருக்கும் அவரவர்களுடைய நிலைமைக்கும் அவசியத்துக்கும் ஏற்றவாறு தனித்தனியான சீர்திருத்தக்காரர்களை ஒவ்வொரு தேசத்துக்கும் அனுப்பவேண்டியதான ஆவசியகம் நேரிட்டது. இவ்வாறாகத் தோன்றிய நபிமார்கள் ஒவ்வொரு குறிப்பிட்ட ஜாதியை உயிர்ப்பிக்கும் விஷயத்தில் அவரவர்களுக்கேற்ற துறையில் உழைத்து வந்தார்கள். அவர்களுடைய தூது அவசியமாயிருந்த இடத்துக்குத் தகுந்தவாறே அவர்களுடைய ஆத்ம முன்னேற்றமும் ஒரு வரம்புக்குள் அடங்கியிருந்தது; இந்தப் பிரகாசமானது சில காலம் வரைமட்டுமே பிரகாசித்துக்கொண்டிருந்து பின்னர் நாளடைவில் கொஞ்சங் கொஞ்சமாக வெளிச்சங்குன்றி, இறுதியில் பூரணமாக இருள்சூழ்ந்துகொண்டது. மறுபடியும் அவ்வந்தகாரத்தை யொழித்துப் பிரகாசிக்கச்செய்வதற்காக அநேக சீர்திருத்தக் காரர்களை ஒருவர்பின் ஒருவராக அனுப்பப் பிரமயம் நேரிட்டது. இவ்வாறு தெய்வகடாக்ஷத்தால் ஒவ்வொரு காலத்தில் ஒவ்வொருவராக அனேக ஜாதியார்களுக்கும் தனித்தனியான ரஸூல்மார்களை அனுப்பியதனால் ஓர் இழிவான அபிப்பிராயம் ஜனங்களிடையில் ஏற்பட ஹேதுவுண்டாயிற்று. அஃதாவது, ஒவ்வொரு ஜாதியாரும் தமக்குக் கிடைத்ததைப்போன்ற தெய்வ கடாக்ஷங்கள் மற்ற ஜாதியார்களுக்கும் கிடைத்திருக்குமென்பதையறியாமல் தாம் மட்டும் ஆண்டவனால் பொறுக்கியெடுக்கப்பட்ட சிறந்த ஜாதியாரென்று கருதத்தொடங்கினார்கள்; இவ்வெண்ணமானது அவர்களைத் தங்களுக்குமாத்திரம் ஆண்டவன் சலிகைகாட்டுகிறானென்னும் நினைப்புடன் பலவிதமான குற்றங்களை யிழைக்கும் வண்ணம் செய்துவிட்டது. (தொடரும்)



## மலாய் நாட்டில் நமது ஆசிரியர்

சென்ற 11-2-25 புதன்கிழமையன்று சென்னையினின்றும் எஸ். எஸ். எல்லங்கா கப்பலில் ஜனாப், ஒ. இ. முஹம்மது ஷரீப் சாஹிப் அவர்களுடன் கீழ் நாட்டுக்குப் புறப்பட்ட நமது ஆசிரியர், வழியில் 13-2-25 வெள்ளிக் கிழமையன்று கப்பலிலேயே ஜுமுஆப்பிரசங்கம் செய்து மீண்டும் 18-2-25 புதன் கிழமை மாலையில் இராப் போஜனம் முடிந்தவுடன் 2-வது வகுப்பு போஜனசாலையில் அங்கே குழுமியிருந்த ஹிந்து முஸ்லிம் சகோதரர்களின் முன் “இஸ்லாத்தின் சிரேஷ்டமும் முஸ்லிம்களின் கடமையும்” என்னும் விஷயமாக இனிய பிரசங்க மொன்றும் செய்தார்கள். அவ்வமயம் இஸ்லாத்தின் தொன்று தொட்ட பழமையைப் பற்றியும், எல்லாச் சாதியாருக்கும் இரசூல்மார்கள் (ஆண்டவனின் தூதர்கள்) இறைவனால் அனுப்பப்பட்டதைப் பற்றியும், பின்னர் கால தேசவர்த்தமானங்களுக் கேற்றவாறு இறுதி நபியாகிய இரசூல் நாயகம் முஹம்மதுமுஸ்தபா (ஸல்) அவர்கள் திருவவதாரம்புரிய நேரிட்ட அவசியத்தைப் பற்றியும், இந்த இறுதி இரசூல் அவர்களால் உபதேசிக்கப்பட்ட உண்மையாகிய ஏக தெய்வக் கொள்கையையும் ஏக சகோதரத்துவக் கொள்கையையும் இன்ன விதமாக ஒவ்வொரு முஸல்மானும் முதன் முதலில் சுயமே உணர்ந்து கொண்டு பிறகு அவற்றை ஏனை மனித கோடிகளுக்கும் அறிவிக்க வேண்டுமென்பதைப் பற்றியும் எடுத்தோதினார்கள். இவ்வாறு பிரசங்கங்கள் செய்த வண்ணமாய் 20-2-25 வெள்ளிக் கிழமைக் காலை அல்லா(ஹ்)வின் அனுக்ரஹத்தினால் சுகமே பினாங்கு போய்ச் சேர்ந்தார்கள்.

கப்பல் கரைக்குச் சேருவதற்குச் சில தினங்களிருக்கும்போதே, முன்னதாகக் கோலாலம்பூரில் பிரசுரமாகும் “தமிழ் நேசன்” பத்திரிகையில் அபிமானிகளால் ஆசிரியரின் வருகையைப்பற்றிய விஷயம் பிரசுரிக்கப்பட்டிருந்தபடியாலும், அன்னாரை வரவேற்க ஒரு கமிட்டி நியமிக்கப்பட்டிருந்தபடியாலும் கப்பல் பினாங்கு போய்ச் சேர்ந்ததும் அவ்வூர் முஸ்லிம்

வர்த்தக சங்கத்தார்களாலும், ஸ்ரீமான்களான, கா. ஜ. முஹம்மது ஹுசைன், வேங்கடாசலம்பிள்ளை, சுப்ரமணியம் பிள்ளைபோன்ற பல ஹிந்துமுஸ்லிம் பிரமுகர்களாலும் ஆசிரியாவர்கள் வரவேற்புடன் அழைக்கப் பெற்றார்கள். இவ்விஷயத்தில் சிரத்தை யெடுத்துக்கொண்டு மிகப் பிரயாசைப்படும் முஸ்லிம் வர்த்தக சங்கக் கௌரவக் காரிய தரிசி ஜனாப், சே. உதுமான் சாகிப், ஜனாப் ஆமீன் சாகிப் ஜே. பி. முதலிய மதாபிமானிகளுக்கு நாம் எமது மனமார்ந்த நன்றியைச் செலுத்துகின்றோம். ஆசிரியாவர்கள் 23-2-25 திங்களன்று பினாங்கு இந்தியன் அஸோஸியேஷனில் கனம். அ.கு.ம. முத்து பழனியப்ப செட்டியார் அவர்களின் அக்கிராசனத்தின் கீழ் "பினாங்கிலுள்ள இந்தியர்களுக்கொரு நற்செய்தி" என்னும் விஷயமாக ஓர் சொற்பொழிவு நிகழ்த்தினார்கள். அதன் சாராம்சம்:—

"முஸ்லிம் வேதமாகிய :குர்ஆன் ஷரீ'ப் 6: 109ல் முஸ்லிம்கள் பிறமத தூஷணம் செய்வது கூடாதென்னும் கட்டளை காணப்படுகின்றது; இவ்வாறே கிறிஸ்தவ, ஹிந்து மதங்களிலும் புறமத தூஷணம் காணப்படுவதில்லை யென்றே நான் கருதுகின்றேன். எனவே எல்லா மக்களும் ஓரே குலே என்பதில் கிஞ்சித்தும் சந்தேகமில்லை. ஆதலின் எல்லாப் பாரத மக்களும் ஒரு குலேக்கனியே யாவர். இப்படிப்பட்ட ஒரு குலேக்கனிகளுள்ளும் மதவித்தியாசங்களும் தொழில் வித்தியாசங்களும் காணப்படுகின்றன. இக் காரணத்தைக் கொண்டு ஜாதி வித்தியாசத்தையும் தீண்டாமையையும்நிலைநிறுத்துவதுமானுஷீகத் தருமத்துக்கு அழகன்று. இந்தியாவில் எவ்வாறிருந்தபோதிலும் நாம் பல ஜோலிகளை முன்னிட்டு வந்திருக்கும் இந்தப் பினாங்கில் ஜாதிபேதத்தையும் தீண்டாமையையும் பாராட்டி வருவோமாயின் நமக்கும் நம் ஏழைச் சகோதரர்களுக்கும் பற்பல விதமான தீமைகள் விளைந்துகொண்டே யிருக்கும். ஆங்கிலேயர்களிடமிருந்து நாம் கற்றுக்கொள்ள வேண்டிய படிப்பினை ஒற்றுமை என்பதேயாகும். இத்தீவில் ஒற்றுமையுடனிருந்தால் தமிழ்மொழியை வளரச்செய்வதுடன் "இந்தியக் கூலிகள்" என்றழைக்கப்படும் ஏழைச் சகோதரர்களின் நன்மையையும் பாதுகாக்கலாம். மேலும் பொதுஜன சேவையையும், சுகாதாரப் பாதுகாப்புமுறையில் (குவாரண்டைனில்)நடைபெறும் குறைகளையும் கவனிக்கலாம். ஜாதிவித்தியாசத்தையும் மதவேற்றுமையையும் காரணமாகக்கொண்டு பிளவுகளை உண்டுபண்ணவேண்டாம். ஏனெனின் 'சேர்ந்து வாழ்வதே சிறந்த வலிமையன்றோ?'" என்பதாகும்.

மறுபடியும் பினாங்கிலேயே 27-2-25 வெள்ளியன்று பினாங்கு வர்த்தக சங்கத்தார்களால் கூட்டப்பட்ட பொதுக் கூட்டத்தில் நமது ஆசிரியர் "இஸ்லாமும் தற்கால நிலைமையும்" என்னும் விஷயத்தைப்பற்றி, ஜனாப், சே. உதுமான் சாஹிப் அவர்களின் அக்கிராசனத்தின் கீழ் இனிய தமிழில் நீண்டதோர் பிரசங்கம் செய்தார்கள். அவ்வமயம் இஸ்லாமார்க்கமானது (ஆண்டவனுக்கு முற்றிலும் தலை சாய்த்தல்) மனிதன் தோன்றினகாலம் முதல் தொடர்ந்து வரும் தொன்று தொட்ட மேலான மார்க்கமென்றும், நபிகள் நாயகமவர்கள் காலத்துக்குப்பின் மகா நாகரிக நிலைமையை அடைந்திருந்த இம் மார்க்கமானது இக் காலத்தில் தாழ்ந்து கிடக்கிறதென்றும், இதற்குக் காரண பூதமாயிருந்த பலவற்றுள் முக்கிய காரணம் இஸ்லாமிய பிரசாரத்தை முஸ்லிம்கள் கைவிட்டதும் அவர்கள் இதற்குரிய வேதத்தின் கருத்தைவிட்டு எழுத்தைமட்டும் பின்பற்றத் தொடங்கியதுமே யென்றும் கூறினார்கள். இஸ்லாமிய பிரசாரம் இல்லாததனாலேயே முஸ்லிம்கள் தாழ்மையுற்றிருக்கிறார்களென்பதற்குக் குர்ஆன். 2:143-வது முதலிய பற்பல ஆயத்துக்களைக் கொண்டு ஆதாரமும் காட்டினார்கள். பிரசங்கத்தின் முடிவில் ஆசிரியர் தமக்கும் இவ்வுலகிலுள்ள எந்த விதமான அஹ்மதியா காதியானி முதலிய இயக்கங்களுக்கும் யாதொரு சம்பந்தமுமில்லையென்று விளக்கிக் காட்டினார்கள். மீண்டும் 28-2-25 சனியன்று கூடிய கூட்டத்தில் "சமூகஊழியம்" என்பதைப் பற்றிப்பேசி, 1-3-25 ஞாயிற்றுக்கிழமை எங்முஸ்லிம் யூனியன் சங்கத்தில் "இஸ்லாமும் இதரமதங்களும்" என்னும் விஷயமாக ஆங்கிலத்திலும் அரிய பிரசங்கங்கள் புரிந்துவிட்டு 5ந்தேதி ஸ்டீமரில் புறப்பட்டு கிள்ளான்போய்ச் சேர்ந்தார்கள்.

ஸ்வீட்டன்ஹாம் துறைமுகத்தில் ஹாஜீ. கா. உ. முஹம்மது இப்ராகீம் முதலிய பல முஸ்லிம் பிரமுகர்களால் நல்வரவேற்கப் பெற்றார்கள். அன்று வெள்ளிக்கிழமை இரவு கிள்ளான் பள்ளியில் இஸ்லாத்தைப்பற்றி அரிய பிரசங்கம் செய்தார்கள். பின்புகிள்ளான் "கோஸ்டல் இந்தியன் அஸோஸியேஷன்" ஆதரவில் 10, 11ந்தேதிகளில் முறையே "கல்வியும் அதன் பிரயோஜனமும்," "ஆத்ம முன்னேற்றம்" என்னும் விஷயங்களைத் தமிழிலும் ஆங்கிலத்திலும் பிரசங்கங்கள் செய்துவிட்டு 12ந்தேதியன்று கோலாலம்பூருக்கு விஜயம் செய்தார்கள்.

கோலாலம்பூர் ஸ்காட் ரோட்டிலுள்ள சிலாங்கூர் இந்தியன் அஸோஸியேஷன் ஹாலில் நமது ஆசிரியர் அவர்களை கோலாலம்பூர் முஸ்லிம் சங்கத்தார் வரவேற்று, அவர்களுக்கு ஒரு வந்தனோப சாரப் பத்திரமும் வாசித்துக் கொடுத்தார்கள். அதன் சாராம்சமாவது:—

"அன்புமிக்க ஐய! கண்ணிய மிக்க தங்களை இவ்வூர் முஸ்லிம் சங்கத்தவர் முழு அன்புடன் வரவேற்கிறோம். தங்கள் வரவு நல்வரவாகுக. தாங்கள் இந்நகர்க்கு விஜயமானதும், தங்களின் அரிய உபந்நியாசங்களிற் சிலவற்றை நாங்கள் கேட்டானந்திக்கக் கொடுத்து வைத்ததும் எங்கள் பாக்கியமே. தங்கள் அரும் பெருந்தியாகமன்றோ எங்களை மார்க்கக் கல்வியைக் கவனிக்கச் செய்தது. அல்லாஹுதஆலாவின் திருமறையாகிய குர்ஆன் ஷரீபை, தாங்கள் இனிய தமிழ் மொழியில் ரூபிக்க முன்வந்தீர்கள். தேச முன்னேற்ற உணர்ச்சியின் மிகுதியால் சப் மாஜிஸ்டிரேட் பதவியையும் ராஜிநாமாச் செய்து எவ்வளவோ கஷ்டத்தினிடையே "தாருல் இஸ்லாம்" பத்திரிகையில் ஈடுபட்டு நிஷ்காமியமாக உழைக்கும் இப்பேருதவிக்கு யாங்களியற்றும் கைம்மாறு எத்தன்மைத்தாயினும் மிகையாகுமோ? தங்கள் கைங்கரியம் முற்றுப் பெறுதற்கு எல்லா வசதிகளையும் அல்லா(ஹ்) தந்தருள் புரிவாராக! ஆமீன்," என்பதாகும்.

அன்றையதினமே அச்சங்கத்தாரின் உபசாரத்துக்குப்பின் ஆசிரியர் "இஸ்லாமும் சமூக ஒற்றுமையும்" என்னும் விஷயமாகப் பிரசங்கம் புரிந்து அங்குக் கூடியிருந்த எல்லோரையும் சந்தோஷ சாகரத்துள் ஆழ்த்தினர். மீண்டும் 13ந்தேதி வெள்ளிக்கிழமை 2 மணிக்கு கோலாலம்பூர் இந்திய முஸ்லிம் பள்ளிவாசலில் "இஸ்லாமும் குத்பாவின் வரிசையும்" என்பதைப்பற்றியும், அன்றைய தினமே மாலை 7 மணிக்கு, கோலாலம்பூர் விவேகானந்தாச்சிரமத்தில் "இஸ்லாத்தின் தாராளக் கொள்கைகள்" என்னும் விஷயத்தைப்பற்றியும் தமிழில் இனிய சொற்பொழிவுகள் நிகழ்த்தினார்கள். 14ந்தேதி சனிக்கிழமை மாலை 4½ மணிக்கு சிலாங்கூர் இந்தியன் அஸோஸியேஷன் சங்கத்தார் ஆதரவில் "ஒற்றுமையும்சமூக முன்னேற்றமும்" என்னும் விஷயத்தையும், 15ந்தேதி மாலை 6-30 மணிக்கு கோலாலம்பூர் முஸ்லிம் சங்கத்தார் ஆதரவில் "இஸ்லாம் சமரசமார்க்கம்" என்னும் விஷயத்தையும் ஆங்கிலத்தில் பிரசங்கித்தார்கள்.

இவ்வாறு கோலாலம்பூரில் பல ருசிகரமான உபன்னியாசங்களைப் புரிந்துவிட்டு 18-3-25 புதன்கிழமை மாலை 5½-மணி ரயிலில் புறப்பட்டு மலாக்காவுக்குச்சென்றார்கள். ஆசிரியரவர்கள் புறப்படுவதற்குச் சில தினங்களுக்கு முன்பே அன்னாரின் விஜயத்தை முன்னிட்டு ஜனாப் ஹாஜி நெ. நா. பிச்சை ராவுத்தர் அவர்களாலும் மற்றும் பல பிரமுகர்களாலும் முன் அறிக்கைப் பிரசுரங்கள் வழங்கப்பட்டிருந்தன. ஆசிரியர் அவர்கள் மலாக்காபோய்ச் சேர்ந்ததும் உரிய மரியாதையுடன் ஹிந்து முஸ்லிம் கிரிஸ்தவ சகோதரர்களால் வரவேற்கப்பட்டதுடன் மலாக்கா முஸ்லிம் வாசிகளின் சார்பாக வரவேற்புக் கமிட்டித் தலைவர் ஜனாப். ஹாஜி. நெ. நா. பிச்சை ராவுத்தர் அவர்களால் கீழ்க்கண்ட வந்தனோபசாரப் பத்திரம் ஒன்று வாசித்துக் கொடுக்கப்பட்டது:

"உண்மைக் துழைக்கும் உத்தம சகோதர !—அஸ்ஸலாமு அலைக்கும், தங்களின் அரியவரவை நாங்கள் அன்போடு ஏற்கின்றோம். தன்னலம் துறந்த தங்களின் திவ்விய தரிசனம்லண்டன் வாசிகளுக் கெல்லாம் கிடைத்தது போலவே எங்கட்கும் கிடைத்து, நாங்களும் அதனைக் கண்டு களிக்கும் பெரும்பேற்றை அடையுமாறு எமக்குத் தந்தருளிய ஆண்டவனுக்கே எல்லாப் புகழும் உண்டாவதாக.

கண்ணியமிக்க புண்ணிய சீல!—கற்றோரெனக் கூறப்படும் மற்றோரெல்லாம், தங்கடமையை மறந்து மூலையிலுறங்கும் இக்காலத்தில், தாங்களே முன்வந்து அல்லும், பகலும் அனவரதமும் இஸ்லாத்தின் நன்மையைக் கோரி லில்லாஹ்வுக்கென்றே செய்துவரும் பேரூழியத்தை நாங்கள் பெரிதும் புகழ்கின்றோம்.

பொதுநலங் கோரும் புண்ணிய புருஷ !—தென்னாட்டில் முஸ்லிம்களுக்கென்று தனியே மத சம்பந்தமான பத்திரிகை யொன்றில்லாமலிருந்த நெடுங் குறையை நீக்குவான் வேண்டி எவ்விதன சகாயத்தையும், எதிர்பாராது "தவக்கல் அல்லாஹ்" என்னும் ஒரே நம்பிக்கையுடன் தங்களால் ஆரம்பிக்கப்பட்ட தங்கள் "தாருல் இஸ்லாம்" பத்திரிகையானது சுமார் 6 வருடமாகத் தென்னாட்டிற்குச் செய்துவரும் அரும் பெரும் நன்மைக் கீடாக யாம் எவ்வித கைம்மாறும் செய்ய வல்லமை யில்லோமாதலின், ஆண்டவனே தங்களுக்கு இகபர மிரண்டிலும், அளவில்லா நன்மையைத் தந்தருள்க.

போலிகளுக்கு அஞ்சாப் புருஷர் திலக !—நம்நாட்டில் வசிக்கும் ஒரு சுயநலக் கோஷ்டியாரின் சூழ்ச்சிக்காளாகி, முஸ்லிம் திருமறையின் உட்பொருளை யறியாது கண்ணிழந்த அந்தகர் போல் பலர் காலம் கழித்த தமிழ்நாட்டில் தாங்கள் எதுவரினும் வருகவென்று சத்தியமே ஜயமென்னும் மந்திரத்தால் மகத்தான இடையூற்றையெல்லாம் மனத்தால் தகர்த்து, "குர் ஆனை" த்தமிழ்மொழியில் வெளியிட்டுத் தந்தருளிய தங்களின் பேருபகாரத்திற்கு நாங்கள் என்றென்றும் மாறா நன்றி செலுத்தக் கடமைப் பட்டுள்ளோம்.

அழியாச் செல்வம் படைத்த அறிவாள !—நறையூரென்னும் நன்னகரின், பிரபல குடும்பத்தில் ஜனித்துத் தென்னாட்டின் முஸ்லிம் குலத்திற்கே, திலகம் போல் இலங்கும் திருமணியே ! சகல கலைஞானத்தையும் ஒருங்கே பெற்று, மதத்தின் மீதுள்ள பற்றுதலால் அரசாங்கத்தின் உயர் பதவியையும் வெறுத்துத் தள்ளிய தங்களின் தியாகத்தை யாம் எவ்வாறு புகழவல்லோம். இத்தகைய ஓர் தியாக மூர்த்தியை நம்சமூகத்தாருள் யாங்கள் கிடைக்கப் பெற்றதானது, எங்களின் அதிர்ஷ்டமேயாகும்.

அன்பே அணிகலனாகப் பூண்ட நண்ப !—நம் முஸ்லிம் சமூகத்தாருக்கும், பொதுவாய்த் தாய்நாட்டிற்கும் தாங்கள் செய்துவரும் அரும்பெரும் சேவைக்கு எங்களின் மனமார்ந்த வந்தனத்தையும், மாறா நன்றியறிதலையும் நாங்கள் தெரிவித்துக் கொள்வதோடு சர்வலோக சரண்யனாகிய அல்லாஹு தஆலா தங்களுக்கு தேகாரோக்கிய திடத்தையும், நீண்ட ஆயுளையும் தந்து, தாங்கள் இஸ்லாத்திற்கு இன்னும் பல எண்ணிறந்த நன்மைகள் செய்யும் பொருட்டுத் தங்கள் மனத்திற்கு ஊக்கத்தையும் உற்சாகத்தையும் கொடுத்துத் தங்களை இரக்ஷித்தருள் பாலிக்குமாறு அவனை இறைஞ்சி வேண்டுகின்றோம்."

மலாக்காவில் ஆசிரியரவர்களை வரவேற்பதிலும் மற்றும் ஆசிரியரவர்களுக்கு வேண்டிய உதவிகளைப் புரிவதிலும் அதிக சிரத்தை கொண்டு சிரமத்தைக் கவனியாமல் இஸ்லாத்தின் மேன்மைக்காக உழைத்துவரும் ஜனாப்களான ஹாஜி. நெ. நா. பிச்சை ராவுத்தர், கா. ஜ. முகம்மது ஹுசைன், K. M. சுலைமான் சாஹிப், வா. காதர் பாக்ஷா ராவுத்தர் முதலிய கனவான்களுக்கு எமது மனமார்ந்த நன்றி யறிதலைச் செலுத்தக் கடமைப்பட்டுள்ளோம்.

மானேஜர்.



# இஸ்லாமிய ஞானபோதம்

(முன் 134-ஆம் பக்கத்தொடர்)

இப்படிப்பட்ட உயர்தரமான உன்னத சன்மார்க்கத்தை அடைதற்குரிய வழிகள் இன்ன இன்னவையென்று அல்லாஹு 'தஆ'லாவானவன் தன்னுடைய திருமறையின்கண் பின்வருமாறு விளக்கி யிருக்கிறான்:

"உண்மையான உறுதியுடைய ஆண்மக்களுக்கு (அந்நிய ஸ்திரீகளின்மீது நோக்கத்தைச் செலுத்துவதினின்றும்) தங்களுடைய கண்களை அடக்கிக்கொள்ளவேண்டுமென்று நீர் சொல்வீராக! (ஏனெனின் அவர்களுடைய தோற்றமானது உங்களுடைய இச்சையை எழுப்பிவிடுதல்கூடும்; அப்படிப்பட்ட வேளைகளில் அவர்கள் தங்களுடைய பார்வையைத் தரையில் செலுத்தவேண்டும்). மேலும் அவர்கள் பரிசுத்தத்தை அதிகமாக அனுஷ்டிக்கவேண்டுமென்றும் நீர் சொல்வீராக! (அவர்கள் அந்நிய ஸ்திரீகளின் இனிமையான குரலையும் சங்கீதத்தையும் கேட்பதினின்றும் அவர்களுடைய அழகான உருவத்தைத் தெரிந்துகொள்வதினின்றும் தங்களுடைய செவிகளைப் பத்திரப்படுத்திக் கொள்வார்களாக! ஏனெனின் இதுதான் நல்ல பார்வையையும் நல்ல மனத்தையும் கொடுக்கக்கூடிய மார்க்கமா யிருக்கிறது.)

உண்மையான உறுதியையுடைய ஸ்திரீகளுக்கு அந்நிய புருஷர்கள்மீது தங்களுடைய பார்வையைச் செலுத்தக்கூடாதென்றும் (அவர்களுடைய காமக் குரோதமான வார்த்தைகளைச் செவிசாய்த்து கேட்கக்கூடாதென்றும்) நீர் சொல்வீராக! மேலும் அவர்கள் பரிசுத்தமாக இருக்கவேண்டுமென்றும், அவர்களுடைய வெளிப்படையான பகுதிகளை யல்லாமல் தங்களுடைய தேகத்தில் அலங்கரிக்கப்பட்டிருக்கும் பாகங்களை அந்நியரிடம் காட்டக்கூடாதென்றும், (அவர்களுடைய தலையும், செவியும், கழுத்தும், மார்பும் மறையும்படியாகத்) தங்களுடைய நெஞ்சின்மீது மேலாடையை விரித்துக்கொள்ள

வேண்டுமென்றும் சொல்வீராக! நர்த்தனமாடுகிறவர்களைப்போல் அவர்கள் தங்களுடைய பாதங்களை அடிக்காம லிருப்பார்களாக! இப்படிச் செய்வதானது தீமையான வழியில் இறங்கிவிடாமல் அவர்களை நல்வழியில் சேர்க்கக்கூடிய ஒரு நிச்சயமான பரிகாரமா யிருக்கிறது. மேலும் அவர்கள் ஆண்டவனிடம் திரும்பி அநியாயமான வழியிலிறங்காமல் தங்களைக் காப்பாற்றித் தரும்படி பிரார்த்தனை புரியவேண்டும்! (இதுதான் இரண்டாவது பரிகாரமாயிருக்கிறது)—(24: 30) வியபிசாரத்துக் கருகில் நெருங்கிவிடாதீர்கள்! அஃதாவது, அப்படிப்பட்ட எண்ணங்களுக்கு இடங் கொடுக்கக்கூடிய சந்தர்ப்பங்களினின்றும் நீங்கள் விலகிக்கொள்வதோடு இப்படிப்பட்ட பாபத்தைச் செய்யக்கூடிய துறையினின்றும் நெடுந்தூரம் ஒதுங்கிச் செல்லுங்கள்! ஏனெனின் வியபிசாரம் செய்கிறவன் மஹா கொடிய தீச்செயலைச் செய்கிறான். மேலும் அஃதொரு தீயமார்க்கமா யிருக்கிறது. (ஏனெனின் மனிதன் அடையவேண்டிய இலக்ஷியத்தை இவ் வியபிசாரம் கெடுத்து அதை அடைய முடியாமலும் இடையில் பல அபாயமான இடையூறுகளை ஏற்படுத்திவிடுகிறது.)—(17: 34.)

“மேலும் தங்களுக்கொரு சரியான ஜோடியை அடையப் பெறாதவர் (நோன்பு நோற்றல் அல்லது இலேசான ஆகாரம் செய்தல் அல்லது கடினமான வேலை செய்தல் முதலிய முறைகளால்) தங்களுடைய பரிசுத்தத்தைக் காப்பாற்றிக் கொள்ளக்கூடிய வேறுவழிகளை அனுஷ்டித்தல் வேண்டும்.”--(24 : 33) “சில மனிதர்கள் ஸ்திரீ புருஷர்களுக்குரிய சம்பந்தத்தினின்றும் தங்களைக் காப்பாற்றிக் கொள்ளும்பொருட்டு (விவாகத்தை வெறுக்கக்கூடிய) பிரம்மசரியம் அல்லது சந்நியாசம் அல்லது பீஜத்தைப் பிளந்து எடுத்துவிடுதல் ஆகிய தம்மால் உற்பத்தியாக்கப்பட்ட சில தந்திரங்களைக்கண்டுபிடித்திருக்கிறார்கள்! ஆனால் இம்முறைகளெல்லாம் மனிதர்களாலேயே உற்பத்தி செய்யப்பட்டிருக்கின்றன. இவற்றை நாம் அவர்களுக்கு உபதேசிக்கவில்லை! மேலும் அதன் முடிவானது அவர்களுடைய நூதனமான முறைகளை எப்படி அனுஷ்டிக்க வேண்டுமென்று நினைத்திருந்தார்களோ அப்படி அவர்களால் அனுஷ்டிக்க முடியாமற்போய் விட்டது என்பது தான்”-(52 : 27.)

பீஜத்தைப் பிளந்தெடுத்தல் முதலிய இயற்கைக்குமாற்றமான துறைகளையெல்லாம் அல்லாஹு த ஆ’லா வானவன் தானே போதிக்க வில்லையென்று மேற்கூறிய ஆயத்தில் நன்கு விளக்கி யிருக்கிறான். ஏனெனின் இப்படிப்பட்ட துறைகளெல்லாம் இறைவனுடைய கட்டளையா யிருக்குமாயின் இவ்விதியை ஆண் பெண் அனைவரும் மேற்கொள்ளும்படியா யிருந்திருக்கும். அவ்வாறாயின் நெடுங்காலத்துக்கு முன்னரே இப்பூமண்டலத்தினின்றும் மனித வர்க்கத்தார் ஒழிக்கப்பட்டுப்போ யிருப்பார்கள். இப்படிப்பட்ட தீயவழக்கத்தினால் ஒழுக்கக் கேடும் சந்தான அழிவும் உண்டாவதோடு ஆண்டவனால் இப்படிப்பட்ட இச்சையானது மனிதர்களுக்குக் கொடுக்கப்பட்டிருப்பதற்காக அந்தக் கடவுளின் செய்கையையே நாம் கண்டிப்பதாகவும் ஆய்விடும். மேலும் ஒரு காரியத்தைச் செய்ய முடியாமலிருப்பதில் ஒன்றும் பெருமையில்லை. ஆனால் ஒருவன் தனக்குத்தீமை செய்யும்படியான சக்தி யிருக்கும்போது ஆண்டவனிடத்தில் தனக்குள்ள அச்சத்தினால் அந்தத் தீய எண்ணத்தை யொழித்து நல்ல எண்ணத்துடன் நடக்கும்போதுதான் அவனுக்கு எல்லாவிதமான மரியாதையும் உண்டாகிறது. தன்னுடைய தேகத்தில் இப்படிப்பட்ட சக்தியை யுடையவன் இரண்டு



விதமான முறையில் பெருமையையடைகிறான்: சட்டவிரோதமில்லாத சரியான இடத்தில் அந்த இச்சையை வெளிப்படுத்துவது முதற் பெருமை! சமய மில்லாதவிடத்தில் அந்த இச்சையை அடக்கிக் கொள்வதே மற்றொருவகைப் பெருமையாயிருக்கிறது. ஆனால் இச்சையென்பதையே அடியோடு இழந்துவிட்டவனுக்கு இவ்விருவகைப் பெருமையில் ஒன்றேனும் கிடைப்பது கிடையாது. நபுஞ்சகனாயிருப்பவன் ஒரு சிறு குழந்தையை ஒத்திருக்கிறான்! அவன் தன்னிடத்தில் கிஞ்சித்துமில்லாத ஒருவகைச் சக்தியை அடக்கிக்கொண்டதற்காக அவனுக்கொன்றும் கௌரவம் கொடுக்கப்படவில்லை. அவனுக்கோ இச்சையில்லை; ஆதலின் அதை அவன் அடக்கவேண்டிய அவசியமுமில்லை! இக் காரணத்தினால் அவனுக்கொன்றும் பெருமையும் கொடுக்கப்படுவதில்லை.

மேலே குறிப்பிடப்பட்ட திருவாக்கியங்களெல்லாம் பதிபத்தினி விரதத்தைக் காப்பாற்றிக் கொள்வதற்குரிய நேர்த்தியான போதனைகளை உபதேசிப்பதோடு பரிசுத்த நிலைமையைப் பெறுதற்கு வேண்டிய ஐந்து வழிகளையும் காண்பிக்கின்றன. இவையாவன: அந்நியர்களைப் பார்ப்பதினின்றும் கண்களைப் பத்திரப்படுத்திக் கொள்ளுதல்; கெட்ட எண்ணத்தை உண்டுபண்ணத் தக்க அந்நியரின் தொனியைக் கேட்பதினின்றும் செவிகளைப் பத்திரப்படுத்திக்கொள்ளுதல்; அந்நிய ஸ்திரீ புருஷர்களின் அன்பிற் குரிய கதைகளைக் கேளாதிருத்தல்; வியபிசாரமென்னும் தீய ஒழுக்கத்தில் இறங்கிவிடும்படியான அபாயம் நேரிடக்கூடிய அவசியத்தை விலக்கிக்கொள்ளுதல்; இறுதியாக விவாகமாகாத காலத்தில் நோன்பு நோற்றல் முதலிய செய்கைகளால் எண்ணத்தை நிதானப்படுத்திக்கொள்ளுதல் ஆகிய இவைகளாம்.

(தொடரும்)




முஸ்லிம்களும் ஜாதிப் பிரிவினையும்:—வங்காளத்திலும் மற்றுஞ் சில மாகாணங்களிலும் முஸ்லிம்கள் தங்களுக்கென்று உத்தியோகத்திலும் மற்றைப் பொது ஸ்தாபனங்களிலும், தங்களுக்குப் பிரத்தியேகமான தனிப் பிரதிநிதித்துவம் வேண்டுமென்று மல்லாடுகிறார்கள்; இதனால் வங்காளத்தில் சில விஷமிகள் சுயராஜ்ய இயக்கத்துக்கும் மாறாகப் போராடுகின்றனர். ஆனால் இந்தியக் கிறிஸ்தவர்களோ முஸ்லிம்களைக்காட்டினும் மிகக் குறைவாயிருந்தும் தங்களுடைய மகா நாட்டில் ஒருமுறை, இரு முறையோடு நிறுத்தாமல் மூன்றாவது முறையாகவும் தங்களுக்குத் தனிப் பிரதிநிதித்துவம் வேண்டாமென்று கண்ணியமாகத் தீர்மானஞ் செய்திருக்கின்றனர். அவர்கள் தெய்வத்தின்மீது நம்பிக்கைவைத்து முயற்சி செய்கின்றனர். ஆனால் முஸ்லிம்களோ தங்கள் அதிருஷ்டத்தின்மீது முழு நம்பிக்கையும் வைத்துப் பிரத்தியேக சலிகையால் சோம்பியிருப்பவரேபோல் காணப்படுகின்றனர். “முயற்சியுடையார் இகழ்ச்சியடையார்” என்பதேபோல் கனம், ஸர். ஹபீபுல்லாவும் முதன்முதலில் ஹிந்துக்களின் தொகுதிக்காகவே நின்று சென்னைச் சட்டசபைக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டாரென்பது நமக்கு ஞாபகம்வருகிறது. எனவே பிரத்தியேகசலிகையாராட்டுவது நம்முடைய நன்முயற்சிக்குச் சாதகமாயிருக்குமென்று எண்ணக்கூடவில்லை. “சுமையைச் சுமக்கும் ஓர் ஆன்மாவானது வேறோர் ஆன்மாவின் சுமையைச் சுமக்கமாட்டாதென்றும், மனிதனுக்கு அவன் முயற்சித்ததைத் தவிர (வேறொன்றும்) இல்லையென்றும் (அவன் அறி

விக்கப்படவில்லையா?) என்பது :குர்ஆன், 53:38,39-வது வாக்கியம்.

* * * *

"சட்டை"யும் "நீண்ட அங்கி"யும் :— "உன் சட்டையை எடுத்துக்கொள்ளவேண்டுமென்றிருக்கிறவனுக்கு உன் நீண்ட அங்கியையும் விட்டுவிடு," என்று இயேசுகிரிஸ்து உபதேசம் பண்ணினுர். ஆனுல் அனுஷ்டானத்தில் அக் கிரிஸ்தவர்கள் எவ்வாறு நடந்துவருகின்றனரென்பது உங்களுக்குத் தெரியும். ஞாயிற்றுக்கிழமையின் உபதேசங்களில் எத்துணேயோ அருமையாகப் பாதிரிமார்கள் உபதேசம் புரிகிருர்கள். ஆனுல் அன்னுரின் உபதேசம் அனுஷ்டானத்துக் கொத்துவருவதில்லே. மாதாகோவிலார்களும் இவ் வரிய உபதேசத்தை யனுஷ்டிப்பதைக் காணேம்; ஏனெனின், லண்டனிலுள்ள ஒரு மாதாகோவிலில் வைக்கப்பட்டிருந்த உண்டியலே உடைத்து ஓர் ஆங்கிலமாது 5 பென்ஸ் (சுமார் 5 அணு) எடுத்துவிட்டாள்; இதற்காக அக் கோவிலதிகாரிசள் அவள்மீது திருட்டுக்குற்றஞ் சாட்டி ஒருமாதக் காவற்றண்டனேயை வாங்கிக்கொடுத்தார்கள். ஆயினும் ஞாயிறுதோறும் "உன் சட்டையை எடுத்துக்கொள்ளவேண்டுமென்றிருக்கிறவனுக்கு உன் நீண்ட அங்கியையும் விட்டுவிடு," என்று மாதாகோவில்தோறும் உபதேசம் புரிகிருர்கள். இதைக்குறித்து லண்டன் பத்திரிகையொன்று இவ்வாறு கூறுகிறது: "வெளிப்படையாக நோக்குங்கால் பைபிளின் புதுப்பிக்கப்பட்ட புதிய ஏற்பாடானது இவ்வாறு காணப்படுகிருற்போல் இருக்கிறது: ஒரு பெண்பிள்ளே 5 பென்ஸ் திருடினுல் அவளுக்கு ஒரு மாதச் சிறைக்காவல் கொடுத்துவிடு."

* * * *

பலமத ஒற்றுமை:—பம்பாய்க் கருகிலுள்ள ஜுஹுவின் பங்களாவில் மகாத்மாஜீ சென்ற ஆண்டில் சஸ்திர சிகித்சைக்குப்பின் ஓய்வெடுத்துக்கொண்டிருந்த அதே இடத்தில் சென்ற டிஸம்பர் 5முதல் 7ந்தேதி வரை "பம்பாய்ப் பரஸ்பர இனச் சகோதரச் சங்கத்தார்" ஒரு கூட்டங் கூடினர். அக் காலே 40 அல்லது 50 ஹிந்துக்களும், முஸ்லிம்களும், கிரிஸ்தவர்களும்,பார்சிகளும்சகோதர ஒற்றுமையைப்பற்றிஆலோசிக்கவும், சகோதர நட்புடன்இரண்டு நாள்மட்டும் அன்னியோன்யமாய்ப் பேசவும் பழகவும் ஏகோபித்து மௌன பூஜை செய்யவும் ஏற்பாடு செய்தனர். அப்பொழுது ஜாதி மத நிறபேதங்களெல்லாம் ஒதுக்கிவைக்கப்பட்டன. ஒன்ருக உண்டு விளேயாடித் தேவ பூஜையும் செய்தனர்.எப்படிப்பட்ட இனவேற்றுமையுமில்லாமல் ஆண்டவனுடைய மக்களாகவே அனேவரும் காணப்பட்டனர். இவ்வாறே இத் தென்னுட்டிலும் நடைபெறுமோவென்று அக் காலத்தை ஆவலுடன் எதிர்பார்க்கிருேம். யாமே இச் சென்னேயில் இப்படிப்பட்ட இயக்கத்தையும் தொடங்க நிச்சயித்திருக்கிருேம். வாய்ப் பேச்சினுல் மட்டும் ஹிந்து முஸ்லிம் ஒற்றுமை உண்டாய்விடுமென்று கூற முடியவில்லே.

* * * *

சுருதியும் தீண்டாமையும்:—தீண்டாமையை ஒழிப்பதற்காக மகாத்மாஜீயை அவரவரும் துன்புறுத்தவேண்டுமென்று பம்பாயிலுள்ள சில ஆசார ஹிந்துக்களென்னப்பட்டவர்கள் தீர்மானஞ் செய்ததைக் குறித்து "மாடேர்ண் ரெவியூ" ஆசிரியர், "ஹிந்துக்களின் ஐதிகப் பிரகாரம் அதற்கு வேண்டிய ஆதாரங்களுள் சுருதீ யென்பதே மகா மேலான உச்சஸ்தானத்தை வகித்துவருகிறது; அப்படிப்பட்ட சுருதியில் தீண்டாமையைப்பற்றிய ஆதாரமொன்றும் இல்லேயென்று நம்பத் தக்கவர்களால் நாம் அறிவிக்கப்படுகிருேம்," என்று எழுதுகிருர். "சுனி சைவ ச்வபாகேச பண்டிதாஃ ஸமதரிசினஃ" (நாயினிடத்தும், நாயின் புலாலேப் புசிப்பவர்களாகிய சண்டாளர்களிடத்தும் அறிவாளிகள் வேற்றுமையற்றவர்கள்) என்னும் கீதையின் உபதேசத்தையும் ஹிந்து நண்பர்கள் ஆழ்ந்துநோக்குவார்களாக.

* * * *

இவ்வருஷ ஹஜ் யாத்திரை செய்வதெங்ஙனம் ?—முஸ்லிம்களுடைய ஒழிந்துபோன மகோன்னத நிலேமையானது மீண்டும் புன்சிரிப்புடன் தழைத்தோங்க வேண்டுமானுல் முஸ்லிம்கள் தங்களுடைய கடமைகளின் முழுப்பொறுப்பையும் உணர்ந்து, தாங்கள் சுயமே பிரயாசை எடுத்துக்கொள்ளாத மட்டில் ஆண்டவனும் துணேபுரிவதில்லே என்பதை



நாம் இச்சஞ்சிகையின் "முஸ்லிம்களின் முக்கிய குறைகள்" என்னும் வியாஸத்தில் விரிவாய் விளக்கி யிருக்கிருேம். தாங்கள் முஸ்லிம் என்னும் ஒரு காரணத்தினுலேயே ஆண்டவன் தமக்குப் பிரத்தியேக சலிகை பாராட்டுவானென்றெண்ணுவது தகாது என்றும், முஸ்லிம்கள் இஸ்லாத்தினின்றும் நெடுந்தூரம் விலகிவிட்டதனுலேயே முஸ்லிம்கள் இத்துணேக் கேவல நிலேமையை அடைந்து வருகிருர்களென்றும் நாம் அடிக்கடி வற்புறுத்தி வருவதை நேயர்களறிவார்கள். அத்தகைய கேவல நிலேமைகளுள் மகாமுக்கியமானதொன்று தற்போது நேர்ந்திருப்பதை அறிவிக்க வருந்துகிருேம். முஸ்லிம்களுக்கு ஆண்டவனுல் விதிக்கப்பட்ட கடமைகளுள் ஒன்ருன ஹஜ்யாத்திரை செய்வது இவ்வருஷம் அசாத்தியமாகக் காணப்படுகிறது. மக்கா முதலிய ஹிஜாஸிய நகரங்களுக்கு உணவுப் பொருள்கள் செல்லாதவாறு அமீர் அலி ஜித்தாத் துறைமுகத்தை அடைத்துவிட் டிருப்பதாகவும், அமீர் அலி ஜித்தா வழியாக மக்காவுக்கு யாரும் போகக்கூடாதென்னும் உத்தரவைத் தளர்த்திய போதிலும் அவர் பணமின்றி இருப்பதால் சாமான்களின்மீது வரிகளே இன்னும் உயர்த்திவிடுவாராதலின் யாத்ரீகர் ஜித்தாபோய்ச் சேர்ந்ததும் பட்டினி கிடக்கவேண்டியிருக்குமென்றும், ஜித்தாவில் துருக்கியர் ஆட்சியில் இருப்பதைக் காட்டினும் ஷரீபின் ஆட்சியில் சுங்கவரி மிக அதிக மென்றும், மதீனுவும் அமீர் அலியின் ஆதிக்யத்திலேயே யிருக்கிறதென்றும், ஆகையால் இவ்வருஷ ஹஜ்யாத்திரை அசாத்தியமென்றும் கிலாபத் தலேவர் என்ற முறையில் மௌலானு ஷௌகத் அலியவர்கள் அறிவித்திருக்கிருர்கள்.வருஷம் முழுதும் சோம்பித்திரிந்து அறுவடை காலத்தில் கையில் அரிவாளேந்தி வயலுக்குச் செல்வதில் பயனென்ன இருக்கப்போகிறது? "தாகம் தோன்றும்போது கிணறுவெட்டுவது"போலக் கஷ்டங்கள் நேரும்போது மட்டும் வருந்திவிட்டுப் பின்னர் அதை மறந்திருப்பதில் பயனென்ன? முஸ்லிம்சகோதரர்காள்! உங்கள்கடமைகளேத்தவருமல் பக்தியுடன் நிறைவேற்றுங்கள்.பின்னர் அல்லாஹு தஆ'லாவும் உதவிபுரிவான்.லக்ஷக்கணக்கானஹாஜிகளின்உள்ளக் கண்ணீரைக்காணும்எல்லாம்வல்ல அல்லா(ஹ்)வும் கூடிய விரைவில் அமீர் அலியின் அநீதியை யொழித்து ஹாஜிகளின் குறைகளே நிவர்த்திப்பானென்றே பூரணமாக நம்புகிருேம்.

## மாதாந்த விசேஷங்கள்

புகைவண்டியில் ஜாதி வித்தியாசம்:—இத்தலேப்பின் கீழ் சென்றமாதசஞ்சிகையில், புகைவண்டிகளில் ஜாதிவித்தியாசம் பாராட்டக்கூடிய வகையில் பிரத்தியேக வண்டிகள் ஒதுக்கிவைக்கக்கூடாதென்னும் சட்டம் வைஸிராயின் சட்டசபையில் நிறைவேறியதாக நாம் குறிப்பிட்டிருந்தோம். பின்னர் கிடைத்த செய்தியால் அதிகார வர்க்கத்துக்கு ஒரு கோட்டையாக விருந்து வரும் இராஜாங்க சபையில் இவ்விஷயம் ஆலோசனேக்கு எடுத்துக் கொள்ளப்பட்டபோது 13ஓட் சாதகமாகவும் 23 ஓட் பாதகமாகவும் கிடைத்தமையால் தோற்றுப் போய்விட்டதென்பதைக் கேட்க வருத்தப்படுகிருேம். பார்லிமெண்டார் இந்திய சட்டசபை மூலமாகக் கொஞ்சம் அதிகாரம் கொடுத்தாற்போல் காட்டி இராஜாங்க சபை மூலமாக அதைப் பிடுங்கிக்கொண்டு விட்டார்கள். இராஜாங்க சபையிலும்தேசியவாதிகள் இன்னுஞ்சிலர் அதிகமாக இருந்தால் நிலேமை இவ்வளவு கேவலமாக இராது.

அகில இந்திய ஷீஆக் கான்பரன்சு:—மார்ச்சுமாதம் 9, 10, 11 தேதிகளில் பம்பாயில் அகில இந்திய ஷீஆக்கான்பரன்சு நடைபெற்றது. அங்கு அக்கிராசனம் வகித்த கான்பகதூர் பாஸ்ஹுஸேன் இந்தியாவின் விடுதலேப் போராட்டத்தில் மற்ற சமூகத்தினருடன் தமது சமூகத்தார் ஒத்துழைக்கவேண்டுமென்றுசொன்னுர்.

ஹிந்து முஸ்லிம் ஒற்றுமை:—நாகபுரியில் மௌலானு அபுல்கலாம் ஆஜாதும்,

பண்டித் நேருவும் ஏற்படுத்திவிட்டுப் போன ஒற்றுமை சென்ற சிவராத்திரி யன்று பரிசோதிக்கப்பட்டது. அன்றும் அப்புறமும் யாதொரு கலவரமுமின்றி விசேஷ சம்பவங்கள் நடைபெற்றன. ஹிந்துக்கள் மஸ்ஜித்களுக் கருகில் மேளதாளத்துடன் ஊர்வலஞ் சென்றனர். ஆண்டவனுக்குகந்த சகோதரத்துவம் ஏற்பட்டதுபற்றிச் சந்தோஷப்படுகிறோம்.

**ஜர்மன் பிரஸிடெண்டின் மரணம்:—** ஜர்மன் தேசத்தின் முதல் பிரஸிடெண்டான மிஸ்டர் ஈபர்ட்டு என்பவர் மார்ச்சுமாதம் முதல் வாரத்தில் இறந்துபோனார் என்கிற செய்தியைக் கேட்டுப் பற்பல தேசங்களின் அரசர்களும் பிரஸிடெண்ட்களும் அனுதாபச் செய்தியை இறந்தவரின் குடும்பத்தாருக்கு அனுப்பியிருக்கிறார்கள். இறந்துபோன ஜனாதிபதியின் பதவிக்கு ஜனநாயகக்கட்சி அபேக்ஷகரான டாக்ட்டர் மார்க்ஸ் தெரிந்தெடுக்கப் படலாம் என்பது தெரிகிறது.

**ஆப்கானிஸ்தான நாணயம் :—** மார்ச்சுமாதம் முதல் ஆப்கானிஸ்தானத்து அமீர் அமானுல்லாகான் என்பவர் பெயரால் " அமானியா " என்று பெயரிட்ட வெள்ளி நாணயங்களும், அரை ரூபாய் போன்ற நிக்கல் நாணயங்களும் அவ்விடத்தில் வெளியாக்கப்படுவதாகச் செய்தி கிடைத்திருக்கிறது.

**ஹஜ்யாத்ரீகர்மீது நிர்ப்பந்தம்:—** மக்கமாநகரம், மதீனா முதலிய இஸ்லாமிய புண்ணிய க்ஷேத்திரங்களுக்கு யாத்திரை செல்லும் ஹாஜிகள், போகவர டிக்கெட் பணத்தை முன்னதாகக் கட்டிவிடவேண்டுமென்று அவர்களை நிர்ப்பந்தம் செய்வதற்காகக் கப்பல் சட்டத்தைத் திருத்தும் பொருட்டுக் கொண்டுவரப்பட்ட மசோதாவை இந்திய சட்ட சபையில் வாதத்துக்கு எடுத்தபோது முஸ்லிம் அங்கத்தினர்களுள் பலர் சாதகமாகவும் பலர் பாதகமாகவும் வாதம் புரிந்தனர். இறுதியில் ஓட்டுக்குவிடப் பட்டதில் 59 பேர் சாதகமாகவும், 13 பேர் விரோதமாகவும் ஓட்டுகொடுத்ததால் மசோதா நிறைவேறிவிட்டது.

**மட்டிமன் யதாஸ்து:—** அரசியல் திருத்த விசாரணைக் கமிட்டியார் மட்டிமனின் தலைமையில் தயாரித்த யாதாஸ்து இந்தியாவில் நடக்கும் இரட்டையாட்சியை ஒழிப்பதற்குச் சிறிதும் அனுகூலமாய் இருக்கவில்லை. கமிட்டியாரின் முடிவுகள் ஏமாற்றத்தை யளிக்க வல்லனவாயிருக்கின்றன என்பதே தேசத்தலைவர்களின் அபிப்பிராயமாகும். இத்தகைய நோக்கத்தை ஜனங்கள் எதிர்த்து நின்று இரட்டையாட்சியை வளர வொட்டாமல் தடுக்கவேண்டும். ஒற்றுமையினாலும் தியாகத்தினாலும்தான் நாம் இதில் வெற்றி பெற முடியும்.

**மகாத்மாஜீயின் தமிழ்நாட்டு விஜயம்:-** மகாத்மா சென்றமாதம் 7ந்தேதி சென்னைக்கு விஜயம் செய்து, மாலை கடற்கரையில் பிரசங்கம் புரிந்துவிட்டு அன்று மாலையே வைக்கம் சென்றார். அவருக்குச் சென்னை நகரபரிபாலன சபையாரும் ஓர் உபசாரப் பத்திரம் வாசித்துக் கொடுத்தனர். மகாத்மாஜீ வைக்கம் முதலான இடங்களைப் பார்வையிட்டுப் பிறகு மீண்டும் 22ந்தேதி சென்னை வந்து இரண்டு நாட்கள் தங்கி 24ந்தேதி புறப்பட்டுச் சென்றார்.

## நோன்புக்காக ஸஹர், சூரியோதய, அஸ்தமன காலம்

ரமலான் மாதத்தில் நோன்பு வைப்பதற்காக அவசியமான
கால நிர்ணயங்களை இதன்கீழ் வரைந்திருக்கிறோம்.

| மாதம். | தேதி. | மெய்யொளிச் சந்தி. (ஸுப்ஹ்ஸாதிக்) | சூரியோதயம். | அஸ்தமனம். |
|---|---|---|---|---|
| மார்ச்சு. | 26 (ரமலான் 1.) | 4-18 | 6-13 | 6-19 |
| ,, | 31 | 4-18 | 6-10 | 6-19 |
| ஏப்ரில். | 8 | 4-19 | 6-5 | 6-20 |
| ,, | 13 | 4-20 | 6-2 | 6-21 |
| ,, | 21 | 4-21 | 5-57 | 6-21 |
| ,, | 24 (ரமலான் 30) | 4-21 | 5-55 | 6-21 |

